# அமுத வாசகம்

(மூன்றும் புத்தகம்—மூன்றும் பாரத்திற்குரியது)

## பொதுப் பகுதி

(1951-ம் வருட புதிய பாட திட்டத்தைத் தழுவி
எழுதப்பட்டுள்ளது.)



ஆசிரியர் :
வித்வான் ந. சண்முகம்
தமிழாசிரியர்,
தொண்டைமண்டல உயர்நிலைப்பள்ளி,
சென்னை.

தென்னிந்திய பதிப்புக் கழகம்
கோடம்பாக்கம் :: சென்னை-24.

 [விலை ரூபாய் ஒன்று

# முன்னுரை

அமுதவாசகம் என்னும் பெயருடன் வெளிவரும் புத்தக வரிசையுள் இது மூன்றும் பாரத்திற்குரிய பொதுப் பகுதி புத்தகம் ஆகும். அரசாங்கத்தினரால் அண்மையில் வெளியிடப்பட்டுள்ள புதிய பாட அமைப்புத் திட்டத்தின்படி இப்புத்தகத்தில் உரை நடைச் செய்யுட் பகுதிகள் எழுதப்பட்டுள்ளன.

இப்பொழுது மாணவர்களாயிருப்பவர்கள் வருங் காலப் பெருமக்களாய் விளங்கி நாட்டுத் தொண்டும், மொழித் தொண்டும் ஆற்றும் நல்லோர்களாய்த் திகழ வேண்டும் என்னும் குறிக்கோளுடன் இப் புத்தகத்தில் காந்தியடிகள், ஜகதீச சந்திரபோஸ், சூரியநாராயண சாஸ்திரியார், ஜார்ஜ் பெர்னட்ஷா முதலானவர்களுடைய வரலாறுகளும், புத்தர், பாரி முதலானவர்கள் வரலாறுகளும், பாங்குகள், உழவின் சிறப்பு, நெசவின் மேன்மை முதலானவைகளும் பிறவும் மாணவர்கள் விரும்பிப் படிக்கும் முறையில்—இவ்வகுப்பின் தகுதிக்கேற்றவாறு எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற் பொருள், வினுக்கள், பயிற்சிகள் முதலியனவும் சேர்க்கப்பட்டுள்ளன.

செய்யுட் பகுதியில் வாழ்த்து, அறவுரை, இயற்கைக் காட்சிகள், கதைகள் முதலான பகுதிகள் அனைத்தும் சேர்க்கப்பட்டுள்ளன. மேலும் முற்காலப் பிற

காலத் தமிழ்ப் புலவர்களின் இனிய பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன. பாட அமைப்பு அளவினும் அதிகமாகச் சில வரிகள் மாணவர்களின் நன்மையைக் கருதிச் சேர்த்துள்ளேன். மூன்றும் பாரத்திற்குரிய திருக்குறட்பாக்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இறுதியில் அரும் பதவுரையும் எழுதப்பட்டுள்ளது.

இப் புத்தகம் நன்கு அமைவதற்குத் தங்கள் பாடல் களைச் சேர்த்துக் கொள்ள உரிமையளித்த பெரியார்கள் **திரு. வி. க., கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, சுத்தானந்த பாரதியார், நாமக்கல் கவிஞர், பாரதி தாசன்** முதலானவர்கட்கும், பலவகையிலும் உதவி புரிந்த **திரு. எஸ். எஸ். அருணகிரிநாதர்** அவர்கட் கும் இப்புத்தகத்தை நன்முறையில் வெளியிட இசைந்த **தென்னிந்தியப் பதிப்புக் கழகத்தார்க்கும்** என் நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்வித் துறையினரும், தலைமை ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும் இப்புத்தகத்தைத் தாழாது ஏற்று மாணவர்களுக்கு உதவுவார்கள் என்னும் முழு நம் பிக்கையுடன் இம் முன்னுரையை முடிக்கின்றேன்.

ந. சண்முகம்

# பொருளடக்கம்

உரை நடை

## செய்யுள்

# அமுத வாசகம்

## மூன்றும் புத்தகம்

## பொதுப் பகுதி

## 1. அண்ணல் காந்தி அடிகள்

வாழ்க நீ எம்மான் இந்த
வையத்து வாழ்வோர் எல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட நின்ற தாமோர்
பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி
மகாத்மா நீ வாழ்க! வாழ்க!

—பாரதியார்

இந்திய மக்கள் தாழ்வடைந்து வறுமை மிகுந்து விடுதலையின்றிப் பாழ்பட்டு இருந்த நிலையில் அவர்களை வாழ்விக்க வந்த பெரியார் **மகாத்மா காந்தி அடிகள்** ஆவார். அடிமையுணர்ச்சி மிகுந்து, தீண்டாமை முதலிய தீயபழக்கங்களைக் கைக்கொண்டு, குடி முதலான கொடிய பழக்கங்கள் நிறைந்து மக்கள் வாழ்ந்து வந்தபோது அவற்றை ஒழித்து அனைவரும் அறிவு நிறைந்த ஆன்றோராகவும், அறவுணர்ச்சி மிகுந்த அறவோர்களாகவும் வாழும்படி அடிகள் வற்புறுத்தினர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் திருவள்ளுவர்

கூறிய பொன்னுரைகளைத் தமது இன்னுரையால் எடுத்துக் கூறி மக்களை நல்லவர்களாக்க முயன்றார். பொய்யும் கொலையும் நமக்கு வேண்டாம்; பொய்யாமையும் கொல்லாமையும் நமது வாழ்வின் குறிக்கோள்களாக அமைய வேண்டும் என்றார்.

"ஒன்றாக நல்லது கொல்லாமை ; மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று"

என்னும் வள்ளுவர் குறளை விளக்கும் முறையில், அஹிம்சை, உண்மை இவ்விரண்டும் மக்கள் மனத்தில் மாறாதிருக்க வேண்டும் என்றார். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்றபடி மக்கள் வாழ்வில் சாதிமத பேதங்கள் கூடா என்று கூறினார். இவைபோன்ற பல அறிவுரைகளை வழங்கிப் பாரத நாட்டை அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெறவைத்து "ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று ஆடுவோமே—பள்ளுப் பாடுவோமே" என்று மக்கள் ஆனந்தக் கடலில் மூழ்குமாறு செய்த நம் தேசத்தந்தை—உலகம் புகழும் உத்தமர்—காந்தி அடிகள் அவர்கள் வரலாற்றை நாம் அறிந்து கொள்வதும், அவர் அறிவுரைகளைப் பின்பற்றி நடப்பதும் நமக்கும் நம் நாட்டிற்கும்—ஏன்? உலகம் முழுவதற்கும் பயன் அளிப்பனவாகும்.

1869-ம் ஆண்டு அக்டோபர் மாதம் இரண்டாம் நாள் பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த குஜராத்தில் போர்பந்தர் என்னுமிடத்தில் காபா காந்தி என்னும் நற்குண சீலருக்கும், புத்லிபாய் அம்மையார்க்கும் அருமைத் திருமகனாக நம் காந்தி அடிகள் தோன்றினார்கள். காந்தி என்பது அவர்கள் குடும்பத்தார் அனைவர்க்கும்

உரிய பொதுப் பெயராகும். மோகன்தாஸ் கரம்சந்த் என்பது அடிகளுக்குப் பெற்ருேர் இட்ட பெயராகும்.

அடிகள் இளமை முதலே தாய் தந்தையரிடத்தில் அன்பும் அடக்கமும் உடையவர். தாய் சொல்லே மீற மாட்டார். எப்பொழுதும் உண்மையே பேசவேண்டும் என்று தாயார் போதித்த உண்மையைத் தமது வாழ் நாள் முழுதும் கடைப்பிடித்தார்; அவ்வுண்மையின் சிறப்பை உலகத்தார்க்கும் விளக்கிஞர். ஒரு முறை அவர் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது உடற்பயிற்சி வகுப்பிற்குச் சிறிது நேரம் தாமதமாகச் சென்ருர். அப்பொழுது அப்பள்ளியின் தலைமை ஆசிரியர் 'ஏன் இவ்வளவு நேரம்?' என்று வினவிஞர். தான் நேரம் தாமதித்துச் சென்றதற்குரிய உண்மைக் காரணத்தைக் கூறிஞர். ஆஞல் அக்கூற்றை ஆசிரியர் நம்பாமல் அவருக்கு இரண்டணு அபராதம் விதித்தார். உடனே அடிகள் அபராதத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் தாம் உண்மை உரைத்தும் ஆசிரியர் நம்பவில்லையே என்ற காரணத்தால் அப்படியே அழுது விட்டார். பின் அவருடைய மன நிலையையும் நற்குணத்தையும் அறிந்த ஆசிரியர் முதலில் விதித்த அபராதத்தைச் செலுத்த வேண்டாமென்று கூறிவிட்டனர்.

கல்லூரியில் நன்ருகப் படித்து முடித்த பிறகு சட்டப் படிப்புக்காக இங்கிலாந்து செல்ல விரும்பிஞர். அவருடைய தாயார் மாமிசம் சாப்பிடக்கூடாது; குடி முதலான தீய பழக்கங்களைக் கொள்ளக்கூடாது என்று சொல்லி அவரிடமிருந்து உறுதிமொழி பெற்றுக்

கொண்ட பிறகே அவரை இங்கிலாந்துக்கு அனுப்பினர். இங்கிலாந்து சென்ற அடிகள் அருமை அன்னைக்குக் கொடுத்த வாக்குறுதிகளை அணுவளவும் மீருது, பாரிஸ்டர் பட்டம் பெற்று இந்தியாவுக்கு வந்து வக்கீல் தொழிலில் ஈடுபட்டார். ஒரு முறை அடிகள் தென் ஆப்பிரிக்காவுக்கு ஒரு வழக்கில் வழக்கறிஞராகச் சென்ருர். அங்கு இந்திய மக்கள்-பெரும்பாலும் தமிழ் மக்கள்-அனுபவித்துவந்த சொல்லொணுத் துயரங்களை யும், அவர்களுக்குச் செய்யப்பட்ட அநீதிகளையும் கண்டு அடிகள் உள்ளம் கலங்கினர். அவர் எந்த நீதிமன்றத் தில் வழக்காடச் சென்ருரோ அங்கேயே அடிகளும் ஒரு இந்தியர் என்ற காரணத்தால் அவமதிக்கப்பட்டார். அப்பொழுது தென் ஆப்பிரிக்காவிலே வாழ்ந்து வந்த இந்திய மக்கள் மற்றவர்களோடு சமமாக வாழும்படி யான உரிமையைப் பெறுவதற்குக் கிளர்ச்சி செய்தார். அக்கிளர்ச்சியின் பயனுக நம் காந்தியடிகள் அனுபவித்த இன்னல்கள் கொஞ்சமன்று. அதுமுதல் அடிகளின் புகழ் உலக முழுவதும் பரவத் தொடங்கிற்று.

பிறகு அவர் நம் நாட்டிற்கு வந்தார். இங்கு, அப் பொழுது ஆங்கிலேயர்களோடு விடுதலைப் போர் புரிந்து வந்த காங்கிரசில் சேர்ந்து உழைக்கத் தொடங்கினர். காந்தியடிகள் காங்கிரசில் சேர்ந்ததுமுதல் அதன் புகழும், உரிமைப் போர்க் கிளர்ச்சியும், மக்களுடைய சுதந்திர ஆசையும் மேலும் மேலும் வளர்ந்து வந்தன. முதலில் நாம் படித்ததுபோல் அஹிம்சை, உண்மை என்னும் இரண்டு கொள்கைகளுமே அடிகளின் இரண்டு கண் களாக இருந்தன. அதனுல் மக்கள் அனைவரையும் தமது

அறிவுரையால் அஹிம்சை நெறியைக் கடைப்பிடிக்கு மாறு வற்புறுத்தி, அமைதியான முறையிலே பல போராட்டங்களைத் தொடங்கி உலகம் அனைத்தும் புகழும்படியான வெற்றியைக் கண்டார். ஆங்கிலேய அரசாங்கம் அடிகளாரைப் பலமுறை சிறைப்படுத்தி யது. அடிகள் எதற்கும் மனச்சோர்வு அடையாமல் புதிய திட்டங்கள் பலவற்றை வகுத்து உதவினர். அந்நிய நாட்டுத் துணிகளையும் பொருள்களையும் வாங்கக் கூடாது என்று வற்புறுத்திக் கதர் இயக்கம் முதலான வற்றை ஆரம்பித்தார். நம் நாட்டு மக்களின் நிலை மைக்கு ஏற்ற முறையிலே கல்வி போதிக்கப்படவேண்டு மென்று அதற்கு வேண்டிய திட்டத்தையும் தீட்டித் தந்தார்.

தாய்மொழியின் மூலமே கல்வி போதிக்கப்பட வேண்டும் என்றும், தாய்மொழிப்பற்று இல்லாதவன் எதற்கும் தகுதியற்றவன் ஆவான் என்றும் அடிக்கடி அவர் சொல்லிவந்தார். மக்கள் சாதி, மதவேறுபாடு களின் காரணமாகத் தங்களுக்குள் பகைமை பாராட்டி வருவதை வெறுத்தார். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்னும் உண்மையை எடுத்துக் காட்டி ஒற்றுமையாக வாழும்படி கூறினர். இந்து, முஸ்லீம் என் னும் இருபெரும் பிரிவினரும் தங்களுக்குள் ஒற்றுமை மிகுந்து வேற்றுமை மறந்து எல்லோரும் ஒரு தாயின் வயிற்றிற் பிறந்தோம் என்னும் உணர்ச்சியுடன் வாழ வேண்டுமென்று வற்புறுத்தினர். கிழக்கு வங்கா ளம், பஞ்சாப் முதலிய பகுதிகளில் தோன்றிய கலகங் களைத் தீர்த்து அமைதியை நிலைநாட்டப் பல இடங் களுக்கும் நடந்து சென்றே தமது கடமையைச் செய்து

வந்தார். அடிகளாருடைய வாழ்க்கைத் துணைவியராக விளங்கிய கஸ்தூரிபாய் அம்மையாரும் அடிகள் நடத்திய அறப்போரில் கலந்து அவரையும் ஊக்கப்படுத்தினர். அவ்வம்மையாரின் குண நலன்கள் அவரைத் தமது பணிகளில் மேலும் மேலும் ஊக்கப்படுத்தின. அடிகள் சிறையிலிருந்தபோதும், மற்ற சமயங்களிலும் அம்மையார் அவர்கள் "தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்னும் பொய்யா மொழியின் பொன்னுரைக்கு எடுத்துக் காட்டாக நடந்து வந்தனர்.

இவ்வாறு செயற்கரும் செயல்கள் பல செய்து "உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்" என்னும் குறளின் கருத்துப்படி, உலக மக்கள் உள்ளத்திலெல்லாம் வீற்றிருக்கும் அடிகள் எந்த நோக்கத்திற்காக இரவும் பகலும் உழைத்து வந்தாரோ, எந்த ஒரு உயர்ந்த நோக்கத்திற்காக உண்ணு விரதம் இருந்து மக்கள் மனத்திலே ஒரு மாற்றத்தை உண்டாக்கினரோ அந்த நோக்கத்திற்காகவே வகுப்பு வாத வெறியன் ஒருவனல் சுட்டுக் கொல்லப்பட்டார். 1948-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 30-நாள் மாலை டில்லியில் பிர்லா மாளிகையில் நடந்த வழிபாட்டுக் கூட்டத்தில் வஞ்சகன் குண்டுக்கு இலக்காகி இவ்வையக வாழ்வைத் துறந்தார்.

இன்று நம்மிடையில் காந்தியடிகள் இல்லை. ஆனல் அவர் காட்டிய அறநெறிகள் இருக்கின்றன. உலகம் உள்ளளவும் அவருடைய புகழ் நிலைத்திருக்கும். மக்களுடைய நன்மைக்காகத் தமது உயிரை இழந்த ஏசு

கிருஸ்துவும், ஆப்ரகாம் லிங்கனும் எப்படி மக்களால் என்றும் மறவாமல் போற்றப்படுவார்களோ அவ்வாறே காந்தியடிகளும் போற்றப்படுவார் என்பதில் ஐயமில்லை. தாம் சொல்லுகின்றபடி செய்து காட்டி, உள்ளும் புறமும் ஒத்து, அன்பும், அருளும், பொறுமையும் கொண்டு, தம்முடைய பகைவர்களும் தம்மைப் போற்றுமாறு வாழ்ந்து, இந்திய தேசம் மட்டுமின்றி இவ்வுலகம் முழுவதுமே இன்புறுதற்கான நெறிகளை எடுத்துக்காட்டி உலகமக்கள் அனைவரும் ஒன்று என்னும் மனப்பான்மையோடு வாழவேண்டும் என்ற உணர்ச்சியை ஊட்டிய காந்தியடிகள் நமக்குக் காட்டிய நன்னெறிகளைப் பின்பற்றி நாம் நடந்து நாட்டின் சிறப்பை வளர்ப்போமாக.

## அருஞ்சொற் பொருள்

வையம்—உலகம், மிஞ்சி—மிகுந்து, அறிவோர்—கருணையுடையவர், பின்சார—அடுத்ததாக, வழக்கறிஞர்—வக்கீல், இன்னல்—துன்பம்.

## வினாக்கள்

1. காந்தி அடிகள் கூறியுள்ள அறிவுரைகளைத் தொகுத்து எழுது.

2. அடிகள் எப்பொழுது எங்கு பிறந்தார்? அவருடைய பெற்றோர் பெயரை எழுது.

3. அடிகள் இளமையில் எவ்வாறு நடந்துகொண்டார்?

4. உண்மையே பேசும் அடிகளின் மனப்பான்மையை விளக்கும் வரலாறு ஒன்றை குறிப்பிடு.

5. இங்கிலாந்து சென்றபோது அடிகள் தம் அன்னைக்குக் கொடுத்த உறுதிமொழிகள் எவை?

6. அடிகள் காங்கிரஸில் சேர்ந்து இந்திய விடுதலைக்காக எவ்வாறு பணியாற்றினர் ?

7. தாய்மொழிப்பற்று. ஒற்றுமை - இவற்றைக் குறித்து அடிகள் கூறியிருப்பவற்றை எழுது.

8. அடிகள் எப்பொழுது இவ்வுலக வாழ்வை எங்ஙனம் துறந்தார் ?

9. அடிகளுடைய முக்கியமான கொள்கைகள் எவை ?

## கட்டுரைப் பயிற்சி

1. "காந்தி அடிகள் உலகிற்குக் காட்டிய கருணை வழிகள்" என்பதைப் பற்றி இருபது வரிக்கு மேற்படாமல் எழுது.

2. 'காந்தி அடிகளும் இந்திய விடுதலையும்' என்பதைப் பற்றி இருபது வரியில் எழுது.

## மொழிப் பயிற்சி

1. "தாய்மொழிப்பற்று இல்லாதவன் எதற்கும் தகுதி அற்றவன் ஆவான்" இதை வினவாக்கியமாக மாற்று.

2. பிரித்தெழுது :—

தாழ்வடைந்து, ஆனந்தக்கடல், பொன்னுரை.

3. இப்பாடத்திலிருந்து குணப்பெயர், இடப் பெயர், தொழிற்பெயர் — இவ்வொவ்வொன்றிற்கும் இரண்டிரண்டு உதாரணங்கள் எழுது.

4. வாக்கியங்களில் அமைத்து எழுது :—
சொல்லொணு, கடைப்பிடிக்குமாறு, அணுவளவும், வாக்குறுதி.

---

# 2. சங்கம் இருந்த நகரம்

"சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும், சவுந்தர பாண்டியன் எனும் தமிழ் நாடனும் மங்கலம் பொருந்த" வீற்றிருந்த மாண்புறுநாடு பாண்டிய நாடாகும். முடியுடை மூவேந்தர்களுள் செந்தமிழ் மொழியைச் சிறப்புடன் வளர்த்த பெருமை பாண்டியர் களுக்கே உரியதாகும். அப்பாண்டியர்கள் தங்கள் தலை நகராகக் கொண்டிருந்த நகரங்கள் பல. அவற்றுள் கபாடபுரம் என்பது ஒன்று. அது இப்பொழுது தெற்கே இந்துமகா சமுத்திரம் உள்ள இடத்தில் இருந்ததென் றும், பிறகு கடல் கொள்ளப்பட்டு மறைந்து விட்ட தென்றும் ஆராய்ச்சியாளர்கள் சொல்கின்றனர். அதன் பிறகு அவர்கள் மதுரையைத் தங்கள் தலைநகராகக் கொண்டார்கள். பாண்டியர்கள் தமிழை வளர்க்க—தமிழ்ப் புலவர்களைப் போற்ற—தமிழ்ச் சங்கம் ஏற் படுத்தியிருந்தனர். பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் வளம் பெற்று விளங்கி வருகிறது என்பதற்கும், உலகி லுள்ள பல மொழிகளில் தமிழ் மிகத் தொன்மை வாய்ந் தது என்பதற்கும் அச்சங்கத்தைப் பற்றிய வரலாறு சான்றாகும்.

முதல் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என்று மூன்று சங்கங்கள் பாண்டியர்களால் ஒன்றன் பின் ஒன்றாக ஏற்படுத்தப்பட்டு வந்ததென்றும், ஒவ் வொரு சங்கமும் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் நிலை பெற்றிருந்தன என்றும் தெரிகின்றது. அம்மூன்று சங்

கங்களுள் கடைச் சங்கம் இருந்த நகரம் மதுரையாகும். சங்கத்தில் இருந்து தமிழாராய்ந்த புலவர்களைச் சங்கப் புலவர்கள் என்று சொல்வார்கள். இப்பொழுது நம் பண்டைய இலக்கண இலக்கியங்கள் என்று போற்றப் படுகின்ற தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப் பாட்டு முதலிய நூல்கள் கடைச் சங்ககாலப் புலவர் களால் இயற்றப்பட்டனவே. அவற்றைப் படிக்கும் போது நம் முன்னோர்கள் கல்வி, வீரம், கொடை முத லியவற்றில் எவ்வளவு பெருமையுடன் விளங்கினர் என்பது விளங்கும்.

இங்ஙனம் தெய்வத் தமிழைத் திறம்பட வளர்த்த மதுரைமாநகர் வைகை நதிக்கரையில் வனப்புடன் விளங்குகின்றது. அங்கு, எல்லாம் வல்ல முழுமுதற் பொருளான இறைவனே அற்புதத் திருவிளையாடல்கள் பல நிகழ்த்தியுள்ளார். மீனாட்சி சுந்தரர் ஆலயம் மிகச் சிறப்புடன் அங்கு விளங்குகின்றது.

பாண்டிய நாடு கடற்கரை அருகில் அமைந்திருந்த காரணத்தால் கடலிலிருந்து முத்து எடுக்கும் தொழில் அங்குச் சிறப்பாக நடைபெற்று வந்தது. அதனால்தான் ஔவையார் ‘பாண்டிய நாடு முத்துடைத்து’ என்று பாண்டிய நாட்டின் சிறப்பைப் பாடியுள்ளார். பிற நாட்டுப் பேரரசர்களின் முடிகளைப் பாண்டிய நாட்டு முத்துக்கள் அழகுபடுத்தினவாம். இன்றும் தூத்துக்குடி முதலான இடங்களில் முத்தெடுக்கும் தொழில் நடை பெறுகிறது.

இந்தியாவில் பழங்காலத்தில் மிகச் சிறப்புடன் விளங்கிய நகரங்களுள் மதுரையும் ஒன்று. இதற்கு ஆலவாய், கூடல் முதலான பல பெயர்களும் உண்டு. மதுரையில் இறைவன் அறுபத்து நான்கு அற்புதத் திருவிளையாடல்கள் புரிந்தார். மதுரை, சங்கப் புலவர்களாலும், சைவ சமயாச்சாரியார்களாலும், மற்றவர்களாலும் சிறப்புறப் பாடப்பட்டுள்ளது.



மதுரை மீனுக்ஷி சுந்தரர் ஆலயம்

மதுரையில் உள்ள மீனுட்சியம்மன் ஆலயமும், சோமசுந்தரக் கடவுள் ஆலயமும் மிக அழகாகக்கட்டப் பட்டுள்ளன. முற்காலத்தில் நம் நாட்டில் சிற்பக் கலையும் ஓவியக் கலையும் நன்ருக வளர்க்கப்பட்டுப் போற்றப்பட்டன என்பதற்கு மதுரைக் கோயில்களும், மற்ற தென்னுட்டுக் கோயில்களும் ஆதாரங்களாகும். தாமரை மலரின் நடுவிலேயுள்ள பொகுட்டைப்போல் மதுரை

யின் நடுவே ஆலயம் அமைந்துள்ளது என்று ஒரு புலவர் மதுரையைத் தாமரை மலருக்கு ஒப்பாகக் கூறியுள்ளார். அக்கோயிலில் உள்ள சிற்பங்களைக் காண்போர் அச்சிற்பங்களை அமைத்த சிற்பிகளையும், அச்சிற்பிகளை ஆதரித்த மன்னர்களையும் போற்றாமல் இருக்கமுடியாது. பல வரலாறுகளையும் சிற்பத்தின் மூலமும் ஓவியங்களின் மூலமும் மக்களுக்கு விளக்கிக் காட்டுவது ஓர் அரிய செயலாகும். மதுரைக் கோயிலின் சுவரில் திருவிளையாடற் புராணக் கதைகள் ஒவ்வொன்றையும் ஓவியமாகத் தீட்டியுள்ளார்கள். முற்கால மக்களுடைய கலையுணர்ச்சியை முற்றிலும் கண்டு களிக்க வேண்டுமானால் தென்னாட்டுக் கோயில்கள் பலவற்றையும் காண வேண்டும். உயர்ந்த கோபுரங்களும், அழகான மண்டபங்களும் மதுரைக் கோயிலில் இருக்கின்றன. அங்குள்ள ஆயிரக்கால் மண்டபம் மிகவும் சிறப்புற்றதாகும். ஒரே கல்லில் செய்யப்பட்டுள்ள சிற்ப வேலைபாட்டின் சிறப்பை ஒவ்வொருவரும் நேரில் பார்த்தே அறிந்து கொள்ளவேண்டும். இவ்வளவு அருமையான வேலைப்பாடுகளுடன் பழந்தமிழர் சிற்பக்கலைத் திறமையின் சின்னமாக விளங்கும் அக்கோயிலின் நடுவில் பொற்றாமரைக் குளம் என்னும் அழகிய தடாகம் ஒன்று இருக்கின்றது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த மதுரை, பிற்காலத்தில் பாண்டியர் ஆட்சி மறைந்தவுடன், பலருடைய ஆட்சிக்கு உட்பட்டது. நாயக்க மன்னர்கள் ஆண்டபோது **திருமலை நாயக்கர்** என்பவர் ஒரு அழகான மண்டபத்தைக் கட்டினார். அதை இப்பொழுது **திருமலை நாயக்கர்**

மஹால் என்று சொல்லுகின்றனர். அதுவும் மிகுந்த அழகுடனே கட்டப்பட்டுள்ளது. மதுரையில் மாரியம்மன் கோவிலும், தெப்பக் குளமும் உள்ளன. அவையும் மக்கள் கண்டுகளிக்க வேண்டிய இடங்களாகும்.


திருமலை நாயக்கர் மஹால்

மதுரைக்குப் பக்கத்திலிருக்கும் **திருப்பரங்குன்றம்** என்னும் ஸ்தலம் தமிழர்களால் சிறப்பித்துப் போற்றப்படும் குறிஞ்சி நிலக் கடவுளான குமரக் கடவுள் கோயில்கொண்டு எழுந்தருளி இருக்கும் ஆறு படை வீடுகளுள் ஒன்ருகும். அழகிய மலையைக் குடைந்து சிற்ப வேலைப்பாடுகள் சிறப்புற அமைக்கப் பட்டுள்ள ஆலயம் ஒன்று அங்கு இருக்கின்றது. அதன் பெருமையைப் **பரிபாடல்** முதலான சங்க இலக்கியங்களில் காணலாம். இதுபோன்ற பல திருப்பதிகள் மதுரையைச் சுற்றிலும் இருக்கின்றன.

இங்ஙனம் பலவாறு பெருமைபெற்ற மதுரை இக்காலத்திலும் பெருமையுடனேயே இலங்குகின்றது. அங்கே பல தொழிற்சாலைகள் இருக்கின்றன. நூல் நூற்கும் இயந்திரத் தொழிற்சாலைகள் இருக்கின்றன. நெசவுத் தொழில் அங்கு அதிகம். மற்றுமுள்ள பல தொழில்களும் நடைபெறுகின்றன. வெண்கலப் பாத்

திரங்கள், மரச்சாமான்கள் முதலியவை மிகமிக அழகாகவும், காண்பவர் கண்களைக் கவரும்படியாகவும் செய்து விற்கப்படுகின்றன. பல உயர்நிலைப் பள்ளிகளும், கல்லூரிகளும் இருக்கின்றன. இப்பொழுது மதுரை ஒரு ஜில்லாவின் தலைநகரமாக விளங்குகின்றது.

## அருஞ்சொற் பொருள்

தொன்மை—பழமை, வனப்பு—அழகு, பொகுட்டு—மொக்கு, அரும்பு, சின்னம்—அடையாளம், தடாகம்—குளம், குடைந்து—தோண்டி.

## வினாக்கள்

1. பாண்டிய நாட்டின் சிறப்பை விளக்கு.

2. 'தமிழை வளர்த்த பெருமை பாண்டியர்களுக்கே உரியது' எவ்வாறு? விளக்கு.

3. மூன்று சங்கங்களைப்பற்றி எழுது.

4. கடைச்சங்ககால நூல்கள் எவை?

5. மதுரையின் சிறப்பை எழுது.

6. பாண்டியநாடு எதற்குச் சிறப்பு வாய்ந்தது என்று ஔவையார் கூறியுள்ளார்?

7. மதுரையில் ஓவிய, சிற்ப வேலைப்பாட்டின் திறமைகளை விளக்கும் சான்றுகள் சிலவற்றை எழுது.

8. மதுரைக்குச் சென்றால் காணவேண்டிய காட்சிகள் எவை?

9. மதுரை கைத்தொழில் சிறப்புற்றது எங்ஙனம்? விளக்கு.

## கட்டுரைப்பயிற்சி

1. 'மதுரையும் தமிழும்' என்னும் பொருளைக் குறித்து இருபது வரியில் எழுது.

2. 'தென்னாடும் சிற்பக்கலையும்' என்னும் பொருள் பற்றிப் பதினைந்து வரியில் எழுது.

## மொழிப் பயிற்சி

1. தெய்வத் தமிழைத் திறம்பட வளர்த்த மதுரைமா நகரம் வைகை நதிக்கரையில் வனப்புடன் விளங்குகிறது. இவ் வாக்கியத்தில் வேற்றுமை உருபுள்ள சொற்களை எடுத்தெழுதி என்ன வேற்றுமை என்று எழுது.

2. பிரித்து எழுது:—

ஆயிரக்கால், பொற்றாமரை, தென்னாடு.

3. 'அக்கோயிலில் உள்ள சிற்பங்களைக் காண்போர், அச் சிற்பங்களை அமைத்த சிற்பிகளையும், சிற்பிகளை ஆதரித்த மன்னர்களையும் போற்றாமல் இருக்கமுடியாது'—இவ்வாக்கியத்தை வினாவாக்கியமாக மாற்று.

---

# 3. ஹென்ரி போர்டு

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் மேன்மைக்கும் காரணமாக இருப்பவை உழவும் கைத்தொழிலுமே யாகும். உழவுத் தொழிலில் உயர்ந்த நாட்டில் வாழும் மக்கள், அறிவை இழக்கும் பசிப்பிணிக்கு ஆளாக மாட் டார்கள். கைத்தொழிலில் திறமைபெற்ற நாட்டில் மக்கள் கவலைக்கு உள்ளாக மாட்டார்கள். ஆகவே உழவுத் தொழிலும் கைத்தொழிலும் வளர்ச்சிபெற நாட்டு மக்கள் நன்ருக உழைக்கவேண்டும். அங்ஙனம் ஊக்கம்கொண்டு உழைத்து உயர்வடைவதற்கு, அவ் வாறு உழைத்துச் சீரும் சிறப்பும் பெற்றுச் செல்வம் பெருக்கி வாழ்ந்த—வாழ்கின்ற அறிஞர்களின் வரலாறு களைத் தெரிந்துகொண்டால் நாமும் முன்னேற்றம் அடையலாம் அல்லவா ? மிக ஏழையாக இருந்து உண் மையான உழைப்பின் பயனுல் உலகம் போற்றும் செல் வராய் வாழ்ந்த **ஹென்ரி போர்டு** என்பவருடைய வரலாற்றைத் தெரிந்துகொள்வோம்.

அமெரிக்காவில் **டியர்பர்ன்** என்னும் ஊரில் 1863-ம் ஆண்டு ஹென்ரி போர்டு பிறந்தார். அவர் தந்தை சிறு அளவு நிலம் உடையவர். அதைப் பயிரிட்டு அதன் மூலம் கிடைக்கும் பொருளைக்கொண்டு வாழ்க்கை நடத்தினர். இளமைப் பருவத்திலேயே போர்டுக்கு இயந்திரங்களைப் பார்ப்பதிலும், அவற்றைப்பற்றி ஆராய்வதிலும், அவற்றை இயக்குவதிலும் அளவுகடந்த ஆசை உண்டு.

தன் தந்தைக்குரிய நிலங்களில் உழுதல் முதலான விவசாயத் தொழில்களைச் செய்வதற்கு இயந்திரங்களைப்பயன் படுத்தினுல் என்ன? என்ற எண்ணம் அவருக்கு இளமையிலேயே தோன்றியது. அதனுல் அவர் பள்ளிக் கூடத்தில் படித்துக்கொண்டிருக்கும்போதே இரும்புச் சாமான்கள் பலவற்றைக் கொண்டு சிறு சிறு இயந்திரங்களைச் செய்யத் தொடங்கினுர். கடிகாரங்களைப் பழுது பார்த்துச் செம்மைப் படுத்தும் திறமையைப் பெற்றுர். இவ்வாறு அவர் மனம் இயந்திரங்கள் அமைப்பதிலும் அவற்றைச் செம்மைப் படுத்துவதிலும் சென்றது. ஒருமுறை அவர் ஒரு எஞ்சினைப் பார்த்தார். பார்த்துப் பெரு வியப்புக் கொண்டார். அது எவ்வாறு செல்கிறது என்பதை அறிந்து கொள்ள விரும்பி அதைச் செலுத்துபவரிடம் சென்று அதைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டார். சிறுவரின் ஆவலை அறிந்த எஞ்சின் ஓட்டுபவர் அவருக்கு அவ் எஞ்சினைப் பற்றிய முழுவிபரங்களையும் விளக்கிக் கூறினுர். அன்று முதல் அவருக்குத் தாமும் அதைப்போல் எஞ்சின் ஒன்று செய்யவேண்டும் என்னும் எண்ணம் தோன்றியது. அந்த எண்ணத்தின் பயனுக இயந்திரம் ஒன்று செய்து முடித்தார். அது மரங்களை அறுப்பதற்குப் பயன்பட்டது. அதைக்கொண்டு தமது பண்ணையில்



ஹென்ரி போர்டு

இருந்த மரங்களை அறுத்தார். பிறகு ஒரு மின்சாரத் தொழிற்சாலையில் வேலையில் அமர்ந்து சில நாள் உழைத்தார். அப்பொழுதுதான் அவர் மக்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடம் செல்லுவதற்குப் பயன்படும் மோட்டார் செய்யும் தொழிலிலும் ஈடுபட்டார். 1892-ம் ஆண்டு, முதல் முதலாக ஒரு மோட்டார் செய்து அதை ஓட்டிக் காட்டினார்.

முதன் முதலில் அமெரிக்காவில் போர்டு செய்த மோட்டார் எல்லோராலும் பாராட்டப்பட்டது. மேலும் பல மோட்டார்களைச் செய்து விற்கத் தொடங்கினார். முதலில் சிறிய தொழிற்சாலை ஒன்றை அமைத்து அதன் மூலம் நாளடைவில் பல மோட்டார்களைச் செய்து குறைந்த இலாபத்திற்கு விற்றார். ஆரம்பத்தில் அவரைப் பலர் பரிகாசம் செய்தனர். பலர் அவர் முயற்சி வீணானது என்று மனத்தளர்ச்சியை உண்டாக்கினர். அவற்றை எல்லாம் பொருட்படுத்தாது போர்டு குன்றா ஊக்கமும் சலியா உழைப்பும் கொண்டு வெற்றி கண்டார். சிலருடன் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்தார். பிறகு அவர்களுடைய பேராசையின் தன்மையைக் கண்டு விலகித் தாமே தனித்து அத்தொழிலை நடத்தினார். அவருக்குப் போட்டியாக வேறொருவரும் மோட்டார் செய்தார். ஒருமுறை இருவர் மோட்டாரிலும் எது வேகமாகச் செல்லக்கூடும் என்று பார்க்க ஒரு போட்டி நடந்தது. அதில் போர்டு மோட்டார்தான் வெற்றி பெற்றது. அன்று முதல் போர்டு மோட்டாரை மக்கள் அதிகமாக வாங்கத் தொடங்கினர். போர்டின் புகழும் பரவத் தொடங்கியது. ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் மோட்டார்கள் விற்பனை ஆயின. மக்களுடைய

நன்மைக்காகக் குறைந்த விலையில் நன்ருக உழைக்கக் கூடிய மோட்டார்களையே அவர் செய்துவந்தார். பணம் சம்பாதிப்பது என்னும் ஒரே நோக்கத்துடன் அவர் இருந்ததில்லை; நாம் ஒழுங்காகச் செய்து ஒரு பொருளை விற்ருேமாளுல் பணம் நம்மைத் தேடிவரும். பணம் பெறுவதற்காக ஒழுங்கின்றி—மக்களை ஏமாற்றிளுல்—முதலில் பணம் சேர்ந்தாலும் நாளடைவில் மக்கள் உண்மையை யுணர்ந்து பிறகு வெறுக்கத் தொடங்குவர். அதனுல் நஷ்டமே ஏற்படும் என்பது அவருடைய கருத்து.

மோட்டார் விற்பனை அதிகமாக ஆக அவர் **போர்டு மோட்டார் கம்பெனி** என்று ஒரு கம்பெனியை ஆரம்பித்தார். சிறியதாக இருந்த தொழிற்சாலையைப் பெரியதாக்கிஞர். மோட்டாருக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் தம் தொழிற்சாலையிலேயே செய்வதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். சிறு ஆணி முதல் பெரிய இயந்திரம்வரை எல்லாம் அங்கேயே செய்யப்படுகின்றன. ஒவ்வொரு பொருளையும் தயாரிப்பதற்கென்று தமது தொழிற்சாலைகளில் ஒவ்வொரு பிரிவு அமைத்துள்ளார். ஒவ்வொரு பகுதியும் செய்து முடிந்தவுடன் அப்பொருட்கள் பலவற்றையும் சேர்த்துப் பூட்டிஞல் ஒரு மோட்டார் ஆகும். இங்ஙனம் மிக எளிய முறையில் நூற்றுக்கணக்கான மோட்டார்களை ஒரே நாளில் செய்து முடிக்கும் ஏற்பாடுகளைச் செய்தார். இவ்வாறு அவர் செய்துவந்ததனுல் மோட்டார் செய்யத் தொடங்கிப் பத்து ஆண்டுகளுக்குள் பல ஆயிரக்கணக்கான மோட்டார்களை அவர் விற்க முடிந்தது. 1911-ம் ஆண்டில் மாத்திரம் 35,000 மோட்டார்கள் விற்கப்

பட்டன என்றால் அவருடைய முயற்சியும் தொழிற்சாலையின் முன்னேற்றமும் எத்தன்மையன என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம் அல்லவா?

போர்டு தமது தொழிற்சாலையை நல்ல முறையில் அமைத்துத் திறமைபெற்ற தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தினார். தொழிலாளர்களுக்கு நிரம்பச் சம்பளம் கொடுத்தார். தமக்குக் கிடைக்கும் இலாபத்தில் தொழிலாளர்களுக்கும் ஒரு பங்கை ஒதுக்கிப் பங்கிட்டுக் கொடுத்தார். அதனால் தொழிலாளர்கள் உண்மையுடனும் ஊக்கத்துடனும் உழைத்தனர். அவருடைய தொழிற்சாலையில் ஒரு விசேடம் உண்டு. அது என்னவென்றால் அங்கு குருடர், செவிடர், கால் இழந்தோர், கை இழந்தோர், பெண்கள் முதலிய பலருக்கும் அவர் வேலை கொடுத்தார். அவரவர்களால் முடிந்த வேலைகளை அவரவர்கள் செய்யலாம். இங்ஙனம் எதற்கும் பயன் அற்றவர் என்று ஒதுக்கப்பட்டவர்களுக்கும் வேலை கொடுத்து அவர்களுக்கும் அதிகக் கூலியைக் கொடுத்து அவர்களையும் காப்பாற்றினார். இச்செயல் ஒன்றே அவரது மனநிலையை நன்கு விளக்கும். மேலும் தொழிலாளர்களிடத்தில் அன்புடன் நடந்துகொண்டார். தொழிலாளர்கள் குறைகளைத் தாமே நேரில் கேட்டு அறிந்து ஆவன செய்தார். ஆனால் எந்தத் தொழிலாளியாவது கம்பெனியின் சட்டதிட்டங்களுக்கு எதிராக நடந்தால் அவனை உடனே வேலையிலிருந்து நீக்கி விடுவார். ஒழுங்கும் கட்டுப்பாடும் தொழிலாளர்களிடை இருக்கவேண்டும்; அப்பொழுதுதான் தொழில் வளரும் என்பது அவருடைய கருத்து. அக்கருத்துப்படியே அவருடைய தொழிற்சாலையில் இருந்தவர் அனைவரும் நடந்து

கொண்டனர். அதனால் அவர்களும் மிகுந்த பொருளைப் பெற்றனர். போர்டும் பெரும் செல்வரானார். தொழிற் சாலையும் வளர்ச்சியுற்றது. மோட்டார்களும் நாளுக்கு நாள் புதுப்புது பாகங்களைக் கொண்டு புகழுடன் பெருகின.

குறைந்த விலையில் அதிக மோட்டார்களை விற்றுப் பெருஞ் செல்வம் சேர்த்துக் குபேரனாக விளங்கிய போர்டு 'தொழிலரசர்' என்று போற்றப்பட்டார். அவருடைய தொழிற்சாலையின் வளர்ச்சியைக்கண்டோர் அதிசயம் உற்றனர். அவருடைய வியாபாரம் ஒழுங் குக்கு உட்பட்டது. எக்காரணத்தைக் கொண்டும் ஒழுங்கு தவறிய செய்கை கிடையாது. பழுதுபட்ட ஒன்றை நல்லது என்று ஏமாற்றி ஏமாந்தவர் தலையில் சுமத்துகின்ற பழக்கம் அவரிடம் கிடையாது. எப் பொழுதும் நல்லவற்றை விற்கவேண்டும்; கெட்ட வற்றை விற்கக்கூடாது என்று அவர் அடிக்கடி கூறுவாராம். அவருடைய பெருந்தன்மை எப்படிப் பட்டது பாருங்கள்!

இவ்வளவு நல்லெண்ணங்கள் வாய்ந்த அவர் செல் வத்தை மிகுதியாகச் சேர்த்ததனால் செருக்குக் கொள்ள வில்லை. ஏழைகளிடம் பேசுவது இழிவு என்று அவர் எண்ணவில்லை. சேர்த்த பணத்தை வைத்துக்கொண்டு நாம் மாத்திரம் வாழ்ந்தால் போதும் என்று அவர் நினைக்கவில்லை. அவர் செய்த அருந்தொண்டுகள் பல. மாணவர்கள் தொழில் திறமைபெற தொழிற் கல்லூரி ஒன்று ஏற்படுத்தினார். ஆண்டு ஒன்றுக்கு இருநூறு மாணவர்களைச் சேர்த்து இலவசமாகப் படிப்பும்

தொழிலும் கற்றுக்கொடுக்கவும், அவர்களுக்கு அவரவர்களுடைய தகுதிக்குத் தகுந்தாற்போல உபகாரச் சம்பளம் கொடுக்கவும் ஏற்பாடு செய்தார். எல்லாவிதமான தொழிற்கல்வியும் அங்கு போதிக்கப்படுகின்றன. இத்தகைய தொழிற் கல்லூரி ஒரு நாட்டிற்கு ஒன்ருவது அமைந்தால் எவ்வளவு நன்மையுண்டாகும்!

தொழிலாளர்களுக்கென்று தனியாக ஒரு மருத்துவச்சாலை ஏற்படுத்தினர். தொழிலாளர்களுக்கு ஏற்படும் நோய்களை நன்ருக ஆராய்ந்து தக்க மருந்து கொடுத்து அவர்கள் விரைவில் நோய்நீங்கி இன்புறும்படியான ஏற்பாடுகளைச் செய்தார். தொழிலாளர்களுக்கென்று சேமிப்பு நிதி ஏற்படுத்தினர்.

இவ்வாறு அரும்பணி பல புரிந்த போர்டு எப்பொழுதும் தொழிலாளர்களைத் தமது பங்காளிகள் என்றும், அவர்கள் பெறும் இன்பமே தமக்கு இன்பம் என்றும் சொல்வாராம். இப்பெரியார் இப்பொழுது உயிருடன் இல்லை. ஆனால் அவர் புகழ் நிலைத்துவிட்டது. புகழ்பட வாழ்ந்து, புகழை நிலைநாட்டி அவர் மறைந்தார். இப்பொழுது அவருடைய மைந்தர் **எட்சல் போர்டு** என்பவர் அத்தொழில்களைக் கவனித்து வருகின்ருர். தந்தையின் கொள்கைகளைப் பின்பற்றி அவர் நடந்து வருகின்ருர்.

உழைப்பு, ஊக்கம், மனம் தளராமை, திறமை, சிக்கனம், அன்பு முதலான அருங்குணங்கள் பலவும் நிறைந்து அரிய முயற்சியால் அனைவராலும் போற்றப்பட்டுப் பொருட்செல்வம், புகழ்ச்செல்வம் எல்லாம்

பெற்று விளங்கிய ஹென்ரி போர்டின் வரலாறு நாம் நமது வாழ்க்கையில் முன்னேற ஓர் எடுத்துக்காட்டாக இருக்கின்றது. 'முயன்றால் முன்னேறலாம்' என்பதும், 'உழைத்தால் உயர்வடையலாம்' என்பதும் இவர் வரலாற்றிலிருந்து தெரிகிறது அல்லவா ?

"ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை"

## அருஞ்சொற் பொருள்

பசிப்பிணி—பசிநோய், பெருவியப்பு—மிகுந்த ஆச்சரியம், பழுதுபட்ட—கெட்டுப்போன, செருக்கு—கர்வம், ஆக்கம்—செல்வம், அதர்—வழி, வினாய்—கேட்டுக்கொண்டு, உடையான் உழை—உடையவனிடம்.

## வினாக்கள்

1. ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணமாய் இருப்பவை எவை ? ஏன் ?

2. ஹென்றி போர்டு என்பவர் எங்கு எப்பொழுது பிறந்தார் ?

3. இளமையில் அவருக்கு விருப்பமாக இருந்தது என்ன ?

4. ஹென்ரி போர்டு மோட்டார் செய்ய ஆரம்பித்தது எவ்வாறு ? எப்பொழுது முதல் மோட்டார் செய்யப்பட்டது ?

5. போர்டினுடைய மோட்டார் பலராலும் விரும்பப்பட்டது ஏன் ?

6. போர்டு மோட்டார் கம்பெனி ஆரம்பித்து எவ்வாறு தமது தொழிலைச் சிறப்புறச் செய்தார் ?

7. போர்டினுடைய மன நிலையை விளக்கும் செயல் எது?

8. தொழிலாளர்களிடம் போர்டு நடந்துகொண்ட முறையும் அதனால் உண்டான நன்மையும் யாவை ?

9. போர்டு செய்துள்ள அறப்பணிகள் எவை ?

10. போர்டின் நற்பண்புகளை எழுது.

## பயிற்சிகள்

1. பிரித்து எழுது :—

பசிப்பிணி; தந்தைக்குரிய; மனத்தளர்ச்சி; தொழிற்சாலை; பெருட்செல்வம்.

2. பின்வரும் பன்மைச் சொற்களுக்கு ஒருமைச் சொற்கள் எழுது.

தொழிலாளர்கள் ; பாகங்கள் ; அவரவர் ; மாணவர்கள்.

3. அவர் மனம் இயந்திரங்கள் அமைப்பதிலும், அவற்றைச் செம்மைப்படுத்துவதிலும் சென்றது. இவ்வாக்கியத்தில் பயனிலை எது ? அதைப் பன்மையாக மாற்று.

---

# 4. விநோத வழக்குகள்

முன்னொரு காலத்தில் அல்ஜீரியா தேசத்தில் சிறந்த நீதிமான் ஒருவர் இருந்தார். அவர் தம்மிடம் வரும் வழக்குகளை நன்ருக விசாரித்துச் சரியான தீர்ப்பு அளித்து வந்தார். அவர் தீர்ப்பு அளித்து வந்தமுறை அனைவர்க்கும் ஆச்சரியத்தை உண்டுபண்ணிற்று. எவ ராலும் தீர்த்துவைக்க முடியாத வழக்குகளை எல்லாம் உள்ளவாறு உணர்ந்து நீதி வழங்கி வந்தார். அத்தேசத் தின் அரசரான ஷேக் என்பவர் ஒரு சமயம் அவர் நீதி வழங்கும் நேர்மையைக் காணவிரும்பி மாறுவேடத் துடன் ஒரு குதிரையின் மீது ஏறிக்கொண்டு வந்தார். வழியில் ஒரு முடவனைச் சந்தித்தார். அவன் அவரைப் பார்த்து 'ஐயா, பசியால் வருந்துகின்றேன். ஏதேனும் உணவு இருந்தால் கொடுங்கள்' என்ருன். உடனே ஷேக் தன்னிடம் இருந்த உணவில் கொஞ்சம் கொடுத் தார். அதைத் தின்றுவிட்டு 'ஐயா! இன்னுமொரு உதவி செய்ய வேண்டும்' என்ருன். 'என்ன உதவி' என்ருர் ஷேக். 'என்னை நீங்கள் உங்களுடைய குதிரையின்மேல் ஏற்றிக்கொண்டு இவ்வூரில் திருவிழா நடைபெறும் இடத்தில் விடவேண்டும்' என்று வேண்டினுன். இரக் கம் உள்ள ஷேக் அதற்கும் உடன்பட்டு அம்முடவனைத் தன் குதிரையின் மீது ஏற்றிக்கொண்டு சென்ருர். திரு விழா நடைபெற்றுக் கொண்டிருந்த இடத்தை அடைந்த உடன் 'இங்குதான் திருவிழா நடக்கிறது. இங்கே இறங்கிவிடு' என்று ஷேக் சொன்னுர்.

அதைக் கேட்ட முடவன் 'ஏன்? நான் இறங்கமாட்டேன். நீ தான் இறங்கவேண்டும்' என்று கூறினன்.

'எதற்காக?' என்று ஷேக் வினவினர்.

'எதற்காகவா? இந்தக் குதிரை எனக்குத் தேவையாக இருக்கிறது. அன்றியும் இது என்னுடைய குதிரை தானே,' என்ருன் முடவன்.

'என்னுடைய குதிரை உனக்குத் தேவையா? இது உன்னுடையதா? நன்ருக இருக்கிறது!' என்று ஷேக் அதிசயத்துடன் கூறினர்.

'ஏன்? இங்கு ஒரு சிறந்த நீதிமான் இருக்கின்ருர். அவரிடம் இந்த வழக்கைக்கொண்டு செல்வோம். அப்பொழுது அவர் என் சார்பாகவே தீர்ப்பு வழங்குகின்ருரா, இல்லையா என்பதைப் பார்' என்று முடவன் கூறினன்.

'அவர் எப்படி என் குதிரையை உன்னுடையது என்று சொல்வார்?' என்று கேட்டார் ஷேக்.

'நம் இருவரையும் அவர் பார்த்தால் யாருக்குக் குதிரை தேவை என்பது அவருக்கு விளங்கும். நீயோ ஆண்டவனல் கொடுக்கப்பட்ட பலமான கால்களையும் நடப்பதற்கு உரிய சக்தியையும் பெற்றிருக்கின்ருய். நானே முடவன். அதனல் எனக்குத்தான் குதிரை அவசியம் தேவை என்பதை உணர்ந்து எனக்குச் சாதகமாகவே தீர்ப்புக் கூறுவார். வேண்டுமானல் அங்கு போகலாம் வா' என்ருன் முடவன்.

இதைக்கேட்ட ஷேக் 'இவ்வழக்கில் அவர் எவ்வாறு நீதி வழங்குகின்றார் பார்க்கலாம்; அவருடைய நீதி வழங்கும் சிறப்பை உணரலாம்' என்று எண்ணி, மன மகிழ்ச்சியுடன் முடவனை நோக்கி 'சரி, அங்கே போகலாம் வா' என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டு சென்றார். இருவரும் நீதிமான் இருக்கும் இடம் சென்றனர். அப்பொழுது நீதிபதி அங்கு பல வழக்குகளை விசாரித்துக்கொண்டிருந்தார். அவற்றை ஷேக் உற்றுக் கவனித்து வந்தார்.

அவற்றுள் ஒரு வழக்கு பின் வருமாறு:—ஒரு கசாப்புக் கடைக்காரன் எண்ணெய்க் கடை ஒன்றில் எண்ணெய் வாங்கச் சென்றான். அப்பொழுது அவன் தான் வாங்கிய எண்ணெய்க்குப் பணம் கொடுக்கத் தனது பணப்பையை எடுத்தபோது அதைப்பார்த்த எண்ணெய் வியாபாரி பண ஆசையால் கசாப்புக் கடைக்காரன் பணத்தை எல்லாம் கவர்ந்து கொண்டான். அதைப்பற்றிக் கசாப்புக் கடைக்காரன் நீதிபதியிடம் பிராது கூறினான். எண்ணெய் வியாபாரி அவன் பேச்சை மறுத்து, "அவன் என்னிடம் சில்லரை இருக்கிறதா என்று கேட்டான். நான் என் பெட்டியைத் திறந்து எடுக்கும்போது அங்கு இருந்த பணப்பையை அப்படியே அவன் எடுத்துக் கொண்டான். நான் கஷ்டப்பட்டு அவனிடமிருந்து அதைத் திரும்பப் பெற்றேன்" என்று கூறினான். இருவர் வாக்குமூலத்தையும் கேட்ட நீதிமான் சிறிது நேரம் யோசித்து "சரி, இந்தப் பணம் இங்கேயே இருக்கட்டும்; நீங்கள் இருவரும் நாளைக்கு வாருங்கள்" என்று சொல்லி இரு

வரையும் அனுப்பிவிட்டார். பிறகு பல வழக்குகளையும் விசாரித்தார்.

கடைசியாக குதிரையில் வந்த ஷேக் என்பவருக்கும் முடவனுக்கும் ஏற்பட்ட வழக்கு விசாரணைக்கு வந்தது. குதிரைக்குச் சொந்தக்காரரான ஷேக் தன் வழக்கின் விவரத்தைக் கூறினர். முடவன் அதை மறுத்து "அது என்னுடைய குதிரை; வழியில் இவர் களைப்புடன் நடந்து வந்ததைக் கண்டு மனம் இரங்கி நான் என்னுடன் அவரை ஏற்றிக்கொண்டு வந்தேன். இறங்க வேண்டிய இடத்தில் இறங்கச் சொன்னல் அவர் மறுத்துத் தன்னுடைய குதிரை என்று சொல்லி என்னுடன் வலிய வாதாடுகிருர்" என்று கூறினன். இருவர் வாதத்தையும் கேட்ட நீதிமான், "சரி, குதிரை இங்கே இருக்கட்டும்; நீங்கள் இருவரும் நாளைக்கு வாருங்கள்" என்று இருவரையும் அனுப்பிவிட்டார்.

## II

மறுநாள் காலை இருவரும் நீதிமன்றம் சேர்ந்தனர். விநோதமான வழக்குகளின் முடிவுகள் எப்படி ஆகின்றன பார்ப்போம் என்ற ஆவலால் மக்கள் திரண்டனர். பல வழக்குகளின் வாதிகளும் பிரதிவாதிகளும் வந்து சேர்ந்தனர். நீதிமானும் வந்து தமக்குரிய ஆசனத்தில் அமர்ந்தார்.

முதலில் கசாப்புக் கடைக்காரனையும், எண்ணெய் வியாபாரியையும் அழைத்தனர். நீதிமான் கசாப்புக் கடைக்காரனைப் பார்த்து "இதோ இருக்கிறது உன்

பணம். நீ எடுத்துக் கொண்டு செல்" என்று சொல்லி விட்டு, எண்ணெய் வியாபாரிக்கு ஐம்பது கசை அடி கொடுக்கச் சொன்னர்.

இரண்டாவதாகக் குதிரையின் சொந்தக்காரரையும் முடவனையும், வரவழைத்தார்கள். நீதிமான் ஷேக்கை நோக்கி 'உமது குதிரையைப் பல குதிரைகளின் மத்தியில் நிறுத்திவைக்கின்ருேம். உம்மால் கண்டு பிடிக்கமுடியுமா உமது குதிரையை?' என்று வினவினர். 'அப்படியே செய்கிறேன்' என்ருர் ஷேக். உடனே பல குதிரைகளின் நடுவில் அக்குதிரை நிறுத்தப்



ஷேக் தம் குதிரையைக் கண்டுபிடித்தல்

பட்டது. ஷேக், உடனே ஒருவிதத் தடையும் இல்லாமல் தமது குதிரையைக் கண்டு பிடித்தார். அதேபோல

முடவனையும் நீதிபதி கேட்டார். அவனும் சரியென்று ஒப்பி அக்குதிரையைக் கண்டுபிடித்து விட்டான். அவ் விருவரும் குதிரையை அடையாளம் காட்டியபோது அந்நீதிமானும் பக்கத்தில் இருந்து அதை உற்றுக் கவனித்தார். நீதி மன்றத்திற்குத் திரும்பி வந்தனர். குதிரைக்குச் சொந்தக்காரரான ஷேக்கை நோக்கி 'நீர் உமது குதிரையை ஓட்டிக் கொண்டு செல்லும்' என்று சொல்லி, முடவனுக்கு ஐம்பது கசை அடி கொடுக்கும்படி அவர் உத்தரவிட்டார். ஷேக் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. 'எப்படி இந்த வழக்குகளைத் தீர்த்தார் இவர்' என்பது அவருக்கு வியப்பாகவே இருந்தது. நேராக அந்த நீதிமானிடம் சென்ருர். அவரைப் பார்த்ததும் நீதிமான் 'ஏன், நான் அளித்த தீர்ப்பு தவரு ?' எனக் கேட்டார். 'இல்லை ; சரியான தீர்ப்பு ; எப்படி இந்த வழக்குகளுக்கெல்லாம் முடிவு கண்டீர்கள் ? என்பது எனக்கு வியப்பினும் வியப்பாக இருக்கின்றது. நான் அல்ஜீரியா தேசத்தின் தலைவன் ஷேக்' என்று சொல்லித் தனது மாறுவேடத்தை நீக்கினுர்.

உடனே நீதிமான் வணங்கித் தமது தலைவரே அங்கு வந்தமைக்கு அதிசயம் உற்றுத் தமது மரியாதைகளைத் தெரிவித்துக் கொண்டார்.

ஷேக் நீதிமானைப் பார்த்து, "எப்படி இந்த வழக்குகளுக்கெல்லாம் முடிவு கண்டீர்" என்று வினவினுர்.

"ஒன்றுமில்லை அரசே! எல்லாம் சாதாரணமான செயல்களே" என்று சொல்லித் தாம் அம்முடிவுக்கு வந்த விதங்களைச் சொன்னுர்.

"முதல் வழக்கில், அந்த எண்ணெய் வியாபாரி தன்னுடைய பணம் என்றான் அல்லவா? அவனுடைய கைகளும் உடையும் எண்ணெய் படிந்து இருந்ததை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அப்பணம் அவனுடையதாக இருந்திருக்குமானால் ஒரு தண்ணீர் உள்ள பாத்திரத்தில் அதைப் போட்டால் எண்ணெய்ப் பசை தண்ணீரில் மிதக்கும்; இல்லையானால் அவ்வாறு இராது என்று எண்ணி அங்ஙனமே செய்தேன். அதில் எண்ணெய்ப் பசை கொஞ்சமும் இல்லை. அதனால் அப்பணம் கசாப்புக் கடைக்காரனுடையது என்று தீர்மானித்தேன்.

"இரண்டாவதாக வந்த உங்கள் இருவரையும் தனித்தனியாகக் குதிரையைக் காட்டும்படி அழைத்துக் கொண்டு சென்றது குதிரையை நீங்கள் அடையாளம் காட்டுகின்றீர்களா என்று பார்ப்பதற்கு அல்ல. அக்குதிரை உங்கள் அடையாளத்தைக் கண்டு கொள்கிறதா என்பதைப் பார்க்கவேதான் அப்படிச் செய்தேன். நீங்கள் வந்து அக்குதிரையை அடையாளம் காட்டிய பொழுது குதிரை தலை அசைத்தும், காதுகளை உயர்த்தியும், கனைத்தும் தனது எசமானனைக் கண்ட மகிழ்ச்சியைத் தெரிவித்தது; முடவன் தொட்ட போது அதன் காலால் ஓர் உதைவிட்டது. இதிலிருந்து யாருடைய குதிரை என்பதை எளிதில் தெரிந்து கொள்ளலாம் அல்லவா? இப்படிப்பட்ட சிறு உபாயங்களால் தான் நீதிவழங்கி வருகின்றேன்" என்று நீதிமான் கூறி முடித்தார்.

இவ்வுரைகளைக் கேட்ட ஷேக் மகிழ்ந்து நீதிமானைப் பார்த்து "ஆண்டவன் உமக்கு நுட்பமான அறிவை

வழங்கியுள்ளான். நீர், நான் இருக்கவேண்டிய இடத்தில் இருக்கவேண்டும். ஆனால் உம்மைப்போல நான் ஒரு நீதிமானுக இருப்பின் இவ்வாறு நீதி வழங்குவேனு என்பது சந்தேகம்" என்று அவரைப் புகழ்ந்து போற்றினர்.

## அருஞ்சொற் பொருள்

நேர்மை—சிறப்பு, முடவன்—கால் இல்லாத நொண்டி, நீதிமன்றம்—நியாயம் வழங்கும் சபை, திரண்டனர்—கூடினர், வியப்பு—ஆச்சரியம், நுட்பமான – திறமையான.

## வினக்கள்

1. அல்ஜீரியா தேசத்து அரசர் மாறுவேடம் கொண்டு வந்தது ஏன் ?

2. முடவன் தனக்கு உதவி செய்த ஷேக்கினிடம் எவ்வாறு நடந்து கொண்டான் ? அதிலிருந்து நீங்கள் அவனைப் பற்றி என்ன நினைக்கின்றீர்கள் ?

3. நீதிமானிடம் வந்த முதல் வழக்கு என்ன ?

4. நீதிமான் முதல் வழக்கில் எவ்வாறு தீர்ப்புக் கூறினர் ? எப்படி ?

5. இரண்டாவது வழக்கில் குதிரையின் சொந்தக்காரனை நீதிமான் எப்படிக் கண்டுபிடித்தார் ?

6. ஷேக் நீதிமானை, எவ்வாறு புகழ்ந்தார் ?

## பயிற்சிகள்

7. சேர்த்து எழுது :

முன் + ஒரு, எண்ணெய் + கடை, திரும்ப + பெற்ருர், உள்ளம் + மகிழ்ச்சி.

2. உடம்படு மெய் சேர்த்து எழுது:—

கசை + அடி, சரி + என்று, வர + அழைத்து.

3. வாக்கியங்களில் அமைத்து எழுது:—

வியப்பினும் வியப்பு, ஈடுபட்ட, எளிதில், மனம் இரங்கி, வாதாடுகிருன்.

4. 'உம்மைப்போல நான் ஒரு நீதிமாஞக இருப்பின் இவ்வாறு நீதி வழங்குவேஞ?' இது என்ன வாக்கியம்? ஏன்?

---

# 5. சர். ஜகதீச சந்திரபோஸ்

இந்தியா கலைத்துறையிலும், ஆத்மீகத் துறையிலும், விஞ்ஞானத் துறையிலும், மற்றுமுள்ள எல்லாத் துறைகளிலும் சிறப்புற்ற நாடாகும். விஞ்ஞானத் துறையிலும் நம் நாட்டில் பல பெரியார்கள் தோன்றி பிற நாட்டார் போற்றும்படி வாழ்ந்து வந்தனர்; வருகின்றனர். **சர். பி. சி. ரே, சர். ஜகதீச சந்திரபோஸ், சர். சி. வி. ராமன்** முதலானவர்கள் அத்தகைய பெருமக்களாவார்கள். அவர்களில் ஜகதீச சந்திர போஸ் அவர்களின் வரலாற்றை இளைஞர்கள் அறிந்து புகழ் பெற்று விளங்குவார்களாக.

வங்காளத்தில் **விக்கிரமபுரி** என்னும் கிராமத்தில் மதிப்பும், பழமையும் பெற்ற குடும்பத்தில் 1858-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30-ஆம் நாள் ஜகதீச சந்திர போஸ் பிறந்தார். அவருடைய தந்தையார் பெயர் **பகவன் சந்திர போஸ்** என்பது. அவர் வங்காளத்திலே உதவி கலெக்டராக உத்தியோகம் பார்த்து வந்தார். ஜகதீசருடைய தாயும் தந்தையும் அவரை அளவற்ற அன்புடன் வளர்த்து வந்தனர். பகவன் சந்திர போஸுக்குத் தன் பிள்ளையை நன்றாகப் படிக்கவைத்து நல்ல அறிஞனாகச் செய்யவேண்டும் என்ற ஆவல் உண்டாயிற்று. அக்காலத்தில் இந்தியாவில் ஆங்கிலம் கற்றுக் கொடுக்கின்ற பள்ளிக்கூடங்களும் இருந்தன. பெரும்பாலும் செல்வர்களுடைய பிள்ளைகள் ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்பப்பட்டனர். ஆனால் பகவன் சந்திரர்

தமது அருமை மைந்தனைத் தாய்மொழிப் பள்ளிக் கூடத்துக்கே அனுப்பினர். அங்கு ஜகதீசர் பல ஏழைப் பிள்ளைகளுடன் பழகினர். அதனால் ஜகதீசர் தமது பிற் கால வாழ்க்கையிலும் எளிமையுடையராகவும் எல் லோருடனும் அன்புடையராகவும் வாழ்ந்தார். முதலில் தாய்மொழியின் மூலம் கல்வி கற்றதனால் அவர் தாய் மொழிப் பற்றும் தாய் நாட்டுப் பற்றும் உடையவராக விளங்கினர். தம் தாய் மொழியிலுள்ள இலக்கியங்களை நன்ருகக் கற்ருர் ; நற்பண்பு பெற்ருர். அதன் பயனுக "ஏழையென்றும் அடிமை என்றும் எவருமில்லை ஜாதி யில்" என்ற பாரதியின் உயர்நோக்கை அவரும் எண்ணினர். அவர் தாம் ஒரு உதவி-கலெக்டர் வீட்டுப் பிள்ளை என்று மற்றவர்களைவிடத் தம்மை உயர்வாக எண்ணியது கிடையாது. எல்லோரும் சமம் என்னும் எண்ணத்துடனேதான் வாழ்ந்து வந்தார்.

தாய்மொழிப் பள்ளிக்கூடத்தில் கல்விகற்ற பிறகு ஆங்கிலப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கலானர். கல்கத்தாவில் உள்ள செயின்ட் சேவியர் கல்லூரியில் படித்தார். பிறகு இங்கிலாந்து சென்று ஐ. சி. எஸ் படிக்க வேண்டுமென்று எண்ணினர். ஆனல் அவ ருடைய தந்தையார் அதற்கு உடன்படாமல் ஜகதீச ரைப் பார்த்து "நீ மற்றவர்களை ஆளும் அதிகாரி ஆவதைவிட ஒரு பெரிய பேரறிஞனுக விளங்குவதைத் தான் நான் விரும்புகிறேன். நீயும் என்னைப்போல் கலெக்டராக வந்து என்ன பயன்" என்று கூறினர். தந்தையின் நல்லுரையைக் கேட்ட தனயன் மருத்துவத் துறை அல்லது விஞ்ஞானத் துறையில் புலமைபெற

விரும்பி, தந்தையின் அனுமதியோடு இங்கிலாந்து சென்ருர். இலண்டன் பல்கலைக்கழகத்தில் இராசயனம், பௌதீகம், தாவர நூல் (Botony), விலங்குநூல் (Zoology) முதலான எல்லாப் பாடங்களையும் அங்கிருந்த நல்லாசிரியர்கள் கற்றுக் கொடுக்க, கற்று, நற்புலமை பெற்ருர். பின் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பட்டம்பெற்று இந்தியாவுக்குத் திரும்பினுர். அவர் மேல் நாட்டிலிருந்தபோது அறிஞர் பலருடைய அன்புக்கு உரியவராய் விளங்கினுர்.

ஜகதீசர் இந்தியாவுக்கு வந்த பிறகு கல்கத்தாவில் உள்ள மாகாணக் கல்லூரியிலே பௌதிகப் பேராசிரியராக நியமிக்கப்பட்டார். திறமையுடனும் விருப்பத்துடனும் தமது கடமையை ஒழுங்காகச் செய்துகொண்டுவந்தார். ஆயினும் அவர் அங்கு மனமகிழ்வுடன் இல்லை. ஏன்? அங்கே தனக்கு, தன்னைப்போலவே பேராசிரியராக இருக்கும் ஆங்கிலேயர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளத்தைவிட குறைந்த சம்பளம் கொடுத்தார்கள். அதனுல் அவர் மூன்று ஆண்டுகள் சம்பளமே வாங்காமல் இருந்து பிறகு மற்றவர்களுக்குச் சமமாகத் தனக்குக் கொடுத்தபோதுதான் வாங்கிக்கொண்டார். இதுவன்ருே சிறந்த செயலாகும்!

இவ்வாறு ஜகதீசர் கல்லூரிப் பேராசிரியராய் இருந்து வரும்போது அக்கல்லூரிக்கென்று தனியாக விஞ்ஞான ஆராய்ச்சிக்கூடம் ஒன்று இல்லையாதலால் அவர் தனக்கென்று சொந்தமாக ஒரு ஆராய்ச்சிக் கூடத்தை அமைத்துக்கொண்டு ஆராய்ச்சி செய்துவரலானுர். சில ஆண்டுகள் சென்றபிறகு கல்லூரியிலும்

ஆராய்ச்சிக்கூடம் அமைக்கப்பட்டது. அவர் தம்முடைய ஆராய்ச்சியின் பயனுகத் தோன்றுவனவற்றையெல்லாம் கட்டுரைகளாக எழுதி விஞ்ஞானப் பத்திரிகைகளுக்கு அனுப்பி வெளியிட்டு வரலானுர். அக்கட்டுரைகளின் அருமையை உணர்ந்து இலண்டனிலுள்ள "இராயல் சங்கம்" ஜகதீசருக்கு நன்கொடை வழங்கி மேலும் பல ஆராய்ச்சிகளேக் செய்யத் தூண்டியது.



சர். ஜகதீச சந்திர போஸ்

அதன் பிறகு வங்காள அரசாங்கமும் சிறிதளவு பணம் உதவி செய்தது. நாளடைவில் ஜகதீசர் மின்சாரத்தைப் பற்றிய ஆராய்ச்சிகள் பல செய்து அரிய கருத்துக்கள் பலவற்றை வெளியிட்டார். இப்பொழுது நாம் காணும்

வானெலி மார்க்கோனியால் கண்டுபிடிக்கப்பட்டாலும் அதற்கு முதலில் அடிகோலியவர்-அத்தகைய கருத்தைத் தோற்றுவித்தவர்-நம் ஜகதீச சந்திர போஸே ஆவார். இலண்டன் பல்கலைக் கழகத்தார் அவருடைய ஆராய்ச்சியை மெச்சி "டாக்டர் ஆப் சயின்ஸ்" என்னும் பட்டம் கொடுத்தார்கள். பிறகு ஜகதீசர் ஐரோப்பா சென்று இலண்டன், பாரிஸ், ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் முதலான பல இடங்களிலும், சிகாகோ, கொலம்பியா, வாஷிங்டன் முதலிய அமெரிக்க தேசத்தின் முக்கிய இடங்களிலும் உள்ளப் பல்கலைக் கழகங்களிலும் சொற்பொழிவு ஆற்றினர். அவருடைய புகழ் உலகம் முழுவதும் பரவியது.

ஜகதீசர் தாவரங்களும் மிருகங்களைப் போலவே உணர்ச்சியுடன் இருக்கின்றன. தாவரங்கள் உண்ணுகின்றன; உறங்குகின்றன; உணர்ச்சியோடு வாழ்கின்றன; கடமையைச் செய்கின்றன என்பதைக் கண்டறிந்தார். அவற்றைப் பல கருவிகளின் மூலம் மக்களுக்கு விளக்கிக் காட்டினர். இவ்வாறே மின்சாரம், தாவரம் முதலியவற்றைப்பற்றி ஆராய்ந்து பல புதிய கருத்துக்களை விளக்கி உலக மக்களால் போற்றப்பட்டார் ஜகதீசர். கல்லூரிப் பேராசிரியர் வேலையிலிருந்து ஒய்வு பெற்ருர். அவருடைய ஆராய்ச்சித் திறமையை வியந்து அரசாங்கம் 'சர்' பட்டம் கொடுத்து அவரை கௌரவித்தது.

ஜகதீசர் ஒய்வு பெற்ற பின்னர் ஒய்வுடன் இருக்கவில்லை. கல்கத்தாவிலே "போஸ் ஆராய்ச்சிச் சாலை" என்ற ஒன்றை ஏற்படுத்தினர். இயற்கையின் நுட்பங்

களை யெல்லாம் ஆராய்ந்து உலகிற்கு அறிவிப்பது அதன் நோக்கமாகும். அங்கு மாணவர்கள் அனைவரும் எவ்வித வேறுபாடும் இல்லாமல் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். ஒவ்வொரு நாட்டிலும் இருந்து திறமைபெற்ற விஞ் ஞானிகளை வரவழைத்து அருமையான சொற்பொழிவு கள் ஆற்றும்படி செய்து வந்தார்.

ஜகதீசர் பெரிய விஞ்ஞானி; சிறந்த தேசபக்தர்; இந்தியா அறிவுத்துறையில் மற்ற நாடுகளுக்குத் தலைமை வகிக்க வேண்டும் என்பது அவருடைய எண் ணம். அவர் சுயநலம் சிறிதுமில்லாதவர்; நல்லொழுக்கம் பலவும் அமையப் பெற்றவர்; பல நாடுகளுக்கும் சென்று வந்தவர். அத்தகைய பெரியார் ஜகதீசரைப் பின்பற்றி நம் நாட்டு இளைஞர்கள் வாழவேண்டும். அவர் ஒரு முறை தமக்கு வரவேற்பு அளித்த பம்பாய் இளைஞர் களுக்குக் கூறிய நல்லுரையைக் கவனியுங்கள். "இளை ஞர்கள் குறுகிய மனப்பான்மையை விட்டொழித்துப் பரந்த நோக்கம் உடையவர்களாயும், உண்மையாளர் களாகவும் வாழவேண்டும். இளைஞர் அனைவரும் இந்தி யாவின் நன்மைக்காக ஏதேனும் ஒரு பயனுள்ள பணி யைச் செய்யவேண்டும்" என்பது அவர் கூறிய அறி வுரையாகும்.

இப்பெரியார் தமது எண்பதாவது வயதில் இசையை இவ்வுலகில் நிலைநாட்டி இவ்வுலக வாழ்வை நீத்தார்.

## அருஞ் சொற்பொருள்

நற்பண்பு—நற்குணம், புலமை பெற—அறிவு பெற (பாண்டித்தியம் பெற), அடிகோலியவர்—திட்டம் வகுத்தவர், இசை—புகழ்.

## வினாக்கள்

1. இந்திய விஞ்ஞானிகள் சிலருடைய பெயர்களை எழுது.

2. ஜகதீச சந்திரர் ஊர், தந்தை பெயர் எழுது.

3. பகவன் சந்திரர் தம் மைந்தனை முதலில் எங்கே படிக்க வைத்தார்? அதனால் ஜகதீசர் பெற்ற நன்மைகள் யாவை?

4. ஐ. சி. எஸ். படிக்க விரும்பிய ஜகதீசருக்கு அவர் தந்தை கூறியதை எழுது.

5. ஜகதீசர் எங்கெங்கு எவ்வெக் கல்விகளைக் கற்றார்?

6. ஜகதீசர் எங்கு என்ன வேலையில் அமர்ந்தார்? அங்கே நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடு.

7. ஜகதீசர் கண்டறிந்த உண்மைகள் யாவை?

8. ஜகதீசர் யார் யாரால் எவ்வெவ்வாறு பாராட்டப் பெற்றார்?

9. ஜகதீசர் இளைஞர்கட்குக் கூறிய நல்லுரைகளை எழுது.

## கட்டுரைப் பயிற்சி

'இந்தியாவும் விஞ்ஞானமும்' என்னும் பொருள்பற்றி இருபது வரியில் எழுது.

## மொழிப் பயிற்சி

கல், கொடு, எண் - இப்பகுதிகளை வினைமுற்றுச் சொற்களாக எழுது.

2. 'நீ மற்றவர்களை ஆளும் அதிகாரியாவதைவிட, பேரறிஞனாக விளங்குவதைத்தான் நான் விரும்புகிறேன்'—இந்த நேர்க்கூற்று வாக்கியத்தை அயற்கூற்று வாக்கியமாக மாற்றி எழுது.

3. தேசம், நாடு என்பவற்றுடன் வேற்றுமை உருபுகள் அனைத்தையும் தனித்தனியாகச் சேர்த்து எழுது.

4. பின்வரும் வாக்கியத்தில் பிழையுள்ள சொற்கள் இருக்கின்றன. அவற்றைத் திருத்தி எழுது;—

அத்தகைய பெறுமக்கலுள் பலர் வரலாற்றை இளைஞர்கள் அரிந்து புகழ்பெற்று விளங்குவார்களாக.

---

# 6. நெசவுத் தொழில் உயர்வு

மக்கள் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்வதனுல் நாணயமும் நம்பிக்கையும் அடைகின்றனர். ஒருவன் தன் தொழிலின் திறமையினுலேயே உயர்ந்த நிலையை அடைகின்றுன். தொழிலால் உயர்வும் சோம்பித்திரிவ தால் தாழ்வும் உண்டாகும். "தீமையற்ற தொழில் புரிந்து யாவரும் தேர்ந்த கல்வி ஞானம் எய்தி வாழ்வம் இந்த நாட்டிலே" என்னும் பாரதியார் வாக்கு நம் நாட்டு இளைஞர்கள் உள்ளத்தில் நன்ருகப் பதிய வேண்டும். "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்யும்" இந்நக் காலத்தில், இளைஞர்கள் அனைவரும் கைத்தொழில் கல்வியில் நாட்டம் செலுத்தி, நாட்டை முன்னுக்குக் கொண்டுவர முயலவேண்டும் என்னும் உயர்ந்த நோக்கத்துடனேதான் நமது அரசாங்கத்தினர் பள்ளியில் பயிலுகின்ற சிறுவர்களுக்குக் கைத்தொழில் கல்வி போதிக்க ஏற்பாடு செய்துள்ளனர்.

சிறு வயதிலேயே தொழிற் கல்வியில் திறமை பெற் ருல் பெரியோர்களான பிறகு தொழில் வளர்ச்சி அடைய வும் இன்பவாழ்வு வாழவும் முடியும். "இது என்ன கைத்தொழில்? இதைக் கற்ருல் என்ன இலாபம்?" என்னும் தாழ்வு மனப்பான்மை இளைஞர்களுக்கு உயர்வு அளிக்காது. ஆதலின் இளைஞர்கள் தங்கள் பள்ளிக்கூடங்களில் பயிற்சி அளிக்கப்படும் நெசவுத் தொழில், தச்சுவேலை, காகிதம் செய்தல் முதலிய

தொழில் துறைகளில் தேர்ச்சிபெற்று எதிர்காலத் தொழில் நிபுணர்களாக விளங்க வேண்டும்.

இங்கு நெசவுத் தொழிலின் வரலாற்றை ஆராய்வோம். ஆதிகாலத்தில் மனிதர்கள் காடுகளில் மிருகங்களைப்போல் வாழ்ந்து வந்தார்கள். அங்குக் கிடைக்கும் காய், கனி, கிழங்குகளையும், தாங்கள் வேட்டையாடிய பிராணிகளையும் உண்டு, மர இலைகளையும், மரப்பட்டைகளையும் உடையாக உடுத்தி வாழ்ந்து வந்தனர். நாளடைவில் பருத்திச் செடியைக் கண்டுபிடித்துப் பஞ்செடுத்து நூற்று, பாய்முடைவதுபோல் முடைந்து, உடை உடுத்தினர். பிறகு, தக்கிளியால் நூல் நூற்க ஆரம்பித்தனர். நம் நாட்டில் இலட்சக் கணக்கான கிராமங்களும் கோடிக்கணக்கான மக்களும் இருக்கின் றனர். மக்கள் தொகையில் பெரும்பாலோர் விவசாயி களே. அவர்கள் உணவுப் பொருள்களையும், பருத்திச் செடியையும், காய், கனி, கிழங்கு முதலியவற்றையும் பயிரிட்டு வருகின்றனர். அவற்றுள் உணவுப் பொருளுக்கு அடுத்த படியாகப் பருத்தியே முக்கியமாகும். தொழில்களிலும் விவசாயத்திற்கு அடுத்து நெசவுத் தொழிலே சிறந்ததாகும். “ஆடையில்லாதவன் அரை மனிதன்” அல்லவா? அவ்வாடையைப் பெறுவதற்கு நூல் வேண்டும். நூல் நூற்கப் பருத்தி வேண்டும். பருத்தி நன்ருக வளரச் செழுமையான கரிசல்மண் நிலம் வேண்டும். அத்தகைய நிலங்கள் நமது இந்தியாவில் பல இடங்களில் இருக்கின்றன. அங்கங்கு விளையும் பருத்திக்கு அந்தந்த இடத்தின் பெயரையோ அல்லது வேறு பெயரையோ வைத்திருக்கின்ருர்கள்.

நம் நாட்டில் விளையும் பருத்திகளை நான்கு வகையாகப் பிரித்துள்ளனர், அவை 1. புரோச்சு, 2. பெங்கால், 3. ஓம்ராஸ், 4. சதரன்ஸ் என்பன. இந்தியாவில் பருத்தி விளையும் ராஜ்யங்கள் சென்னை, பம்பாய், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், பஞ்சாப், ஐதராபாத் என்பவைகளாகும். மேல் சொல்லப்பட்ட நால்வகைப் பருத்திகளும் வெவ்வேறிடங்களிலிருந்து கிடைக்கின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையான நூல் நூற்கப் பயன்படுகிறது. அவற்றுள் சதரன்ஸ் என்பது தென் இந்தியப் பருத்தியாகும். அது சென்னை ராஜ்யத்தில் பல பகுதிகளிலும் பயிரிடப்படுகின்றன. மென்மையான, உயர்ந்த ரகமான நூல் நூற்பதற்கு இப்பருத்தி பயன்படுகிறது.

கைத்தறி நெசவில் நூற்றல், நெய்தல் என்னும் இரண்டு முக்கியமான வேலைகள் உண்டு. நூற்பதற்கு முன் பருத்தியைப் பலவிதங்களில் சுத்தம் செய்யவேண்டும். 1. சீவுதல், 2. விதை நீக்குதல், 2. சுத்தப்படுத்தல், 4. வில் அடித்தல், 5. பட்டை போடுதல், 6. நூற்றல், 7. சிட்டம் வீசுதல் என்பன. சீவுதல் என்பது பருத்தியிலுள்ள தூசு முதலியவற்றை மீனின் முள்ளினாலாவது, கையினாலாவது எடுத்தல்.

நூற்றல், தக்கிளியால் நூற்றல், இராட்டையால் நூற்றல் என இருவகைப்படும். தக்கிளியால் நூற்றல் எப்படி என்பதை அனைவரும் அறிந்திருப்பீர்கள். இடது கை ஆள்காட்டி விரலுக்கும் நடு விரலுக்கும் இடையில் பட்டைப் பஞ்சைப் பிடித்துக்கொண்டு, தக்கிளியில் சிறிது நூல் முன்னமே வைத்துக்கொண்டு

பட்டைப் பஞ்சுடன் தக்கிளியில் சுற்றியுள்ள நூலின் முனையைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு வலதுகை ஆள்காட்டி விரலாலும் பெருவிரலாலும் தக்கிளியின் தண்டை அழுத்திச் சுற்றிவிட வேண்டும்.

இத்தக்கிளி நம் மக்களிடையே பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகக் கையாளப்பட்டு வருகின்றது. மொகஞ்சொதாரோ, ஹாரப்பா முதலான இடங்களில் பூமியை வெட்டி ஐயாயிரம் வருடங்களுக்கு முற்பட்ட பழந்தமிழர்களின் நாகரிகச் சின்னங்களைக் கண்டுபிடித்துள்ளார்கள். அங்குக் கண்டெடுக்கப்பட்ட பொருள்களில் சாதாரண தக்கிளிகளும் விலையுயர்ந்த தக்கிளிகளும் கிடைத்திருக்கின்றனவாம். இதனால் தக்கிளி அக்காலந்தொட்டே பயன் படுத்தப் பட்டதெனத் தெரிகிறது. ஹங்கேரி மலை நாட்டின் பசுமையானபுல் வெளிகளில் பெண்கள் அங்குமிங்கும் போகும் போதுகூட தக்கிளியால் நூற்றுக்கொண்டே செல்கின்றனராம். ருமேனியாவிலுள்ள ஆயர்குலச் சிறுவர்கள் நூற்றுக்கொண்டே ஆடு மாடு மேய்க்கின்றனராம். கிரேக்க நாட்டிலும் தக்கிளியால் நூல் நூற்பார்களாம். புது


**தக்கிளியால் நூற்கும் முறை**

உலகம் எனப்படும் அமெரிக்க நாட்டிலும் தக்கிளி காணப்படுகிறது. பெரு நாட்டுப் பெண்கள் தம் குழந்தைகளை வளர்க்கும் போதும், ஆடுகளை மேய்க்கும் போதும் தக்கிளியால் நூற்றுக்கொண்டே இருப்பார்களாம். உலகம் போற்றும் ஒப்பற்ற தலைவரான காந்தியடிகளின் கையில் தக்கிளி ஓர் ஆயுதமாக இருந்ததென்பதை நாம் அறிவோம். தக்கிளியால் நூற்பதனால் தன்னம்பிக்கை, பொறுமை, விடாமுயற்சி முதலான நற்குணங்களும், சிந்தனை சக்தியும், கைத்திறமையும் வளருகின்றன.

இராட்டையில் நூற்றல்: இராட்டைகள் பல வகைப்படும். அவை: 1. சாதாரண ராட்டை, 2. பர்



இராட்டையில் நூல் நூற்றல்

டோலி ராட்டை, 3. கிசான் ராட்டை, 4. பெட்டி ராட்டை, 5. வில் ராட்டை, 6. குதிரை ராட்டை

முதலியன. இவைகள் ஒவ்வொன்றிலும் நூற்பவர்களின் திறமைக்கு ஏற்றுற்போல 200 கஜம் முதல் 1,000 கஜம் வரைக்கும் ஒரு மணி நேரத்தில் நூற்கலாம். கிசான் ராட்டை, பெட்டி ராட்டை என்ற இரண்டும் பள்ளிக் கூடங்களிலும், வீடுகளிலும் மாணவர்கள் நூல் நூற்ப தற்கு ஏற்றவைகளாகும். இவ்வாறு நூலை நூற்றுத் துணியாக்குவதற்குமுன் கஞ்சி போடுதல், பாவு போடு தல், நூல் சுற்றுதல், இழை வாங்குதல் முதலியவற் றைச் செய்துகொண்டு துணி நெய்வதற்காக உள்ள தறி யின் உதவியால் நமக்கு வேண்டிய ஆடைகளை நெய்து கொள்ளலாம். இத்தகைய தறிகள் நம் நாட்டில் பல இடங்களிலும் மிகுதியாக உள்ளன. இத்தறிகளின்



நெசவுத் தறி

மூலமாகவே உயரிய விலைமதிக்க முடியாத ஆடையெல் லாம் நெய்து வந்தார்கள். இன்றும் நெய்து வருகின்றனர் கள். கி. பி. ஆயிரத்து எழுநூற்று அறுபது (1760)

வரையிலும் தறிவேலை ஒருவிதமான இடையூறும் இல்லாமல் உயர்வுடன் விளங்கியது. பிறகு இங்கிலாந்து தேசத்தில் பல அறிஞர்கள் முயன்று நூல் நூற்பதற்கும், நெசவுக்கும் இயந்திரங்களைக் கண்டு பிடிக்கத் தொடங்கினார்கள். நாளடைவில் பெரிய பெரிய இயந்திர சாலைகளை (Mills) அமைத்துவிட்டனர். இந்தியாவில் மதுரை, கோயமுத்தூர், பம்பாய், ஆமதாபாத், சென்னை முதலான இடங்களிலே நூல் நூற்கும் இயந்திரங்களும், நெசவு இயந்திரங்களும் அமைக்கப்பட்டு ஒரே நாளில் பல்லாயிரக் கணக்கான கஜம் துணிகளை உற்பத்தி செய்கின்றார்கள். ஆயினும் இயந்திரப் போட்டியால் கைத்தறி நெசவு அழிந்து விடும்படி இந்தியர்கள் விட்டு விடக்கூடாது. அதையும் குடிசைத் தொழிலில் ஒன்றாகக் கருதி ஆயிரக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுத்து ஆதரிக்கும் இத்தொழிலை நம் மக்கள் நன்றாகப் போற்ற வேண்டும்; தொழிலை ஆதரிக்க வேண்டும். காந்தி அடிகள், ‘எல்லோரும் நூற்கவேண்டும்; கைநெசவுத் தொழிலை ஆதரிக்கவேண்டும்’ என்று வற்புறுத்திக் கூறியதன் கருத்தை உணர்ந்து வாழவேண்டும்.

கைத்தொழில் வளர்க!

## அருஞ் சொற்கள்

வந்தனை—வணக்கம், நாட்டம்—கருத்து, சிந்தனா சக்தி—கற்பனா சக்தி, இழை—நூல்.

## வினாக்கள்

1. இளைஞர்கள் கைத்தொழில் கல்வியில் நாட்டம் செலுத்த வேண்டுவது ஏன்?

2. பழங்கால மக்கள் எவ்வாறு உடை உடுத்தினர் ?

3. நம் நாட்டுப் பருத்திகளின் பெயர்களை எழுது.

4. நூல் நூற்பதற்கு முன் பருத்தியை என்னென்ன செய்ய வேண்டும் ?

5. தக்கிளியால் நூற்றல் எவ்வாறு ?

6. தக்கிளியால் நூற்றல் நம் நாட்டில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உண்டு என்பதற்கு ஆதாரம் என்ன ?

7. பிற நாடுகளிலும் தக்கிளி பயன்படுத்தப்படுகிறது என்பதை ஆதாரத்துடன் விளக்கு.

8. இராட்டையின் வகைகளும், அவற்றுள் இளைஞர்களுக்குப் பயன்படும் இராட்டையின் பெயர்களும் எழுது.

9. கைத்தறி நெசவை நாம் ஏன் ஆதரிக்க வேண்டும் ?

## கட்டுரைப் பயிற்சி

1. "இளைஞர்களும் நூல் நூற்றலும்" என்னும் பொருள் பற்றி இருபது வரியில் எழுது.

2. "இந்தியாவும் நெசவுத் தொழிலும்" என்பது பற்றி இருபது வரிக்கு மேற்படாமல் எழுது.

## மொழிப் பயிற்சி

1. செல்கின்றனர் ; செய்கின்றோம் ; அடைகிறாய்—பகுபத இலக்கணம் எழுது.

2. தொழிற் பெயருக்கு இரண்டு உதாரணங்கள் எழுது.

3. மோஹெஞ்சொதாரோ முதலான இடங்களில் பூமியை வெட்டி ஐயாயிரம் வருடங்களுக்கு முற்பட்ட பழந்தமிழர்களின் நாகரிகச் சின்னங்களைக் கண்டு பிடித்துள்ளார்கள்—இதில் வேற்றுமைச் சொற்களை எடுத்து எழுதி என்ன வேற்றுமை என்றும் எழுது.

---



சூரியநாராயண சாஸ்திரியார்

# 7. சூரியநாராயண சாஸ்திரியார்

செந்தமிழ் மொழியில் சிறந்த புலமை பெற்றுப் பேரறிஞர்களாகத் திகழ்ந்து பெரும் புகழ்பெற்ற புலவர் பெருமக்கள் பலராவர். அவர்களுள் ஆங்கிலப் புலமையும் தமிழ் ஆர்வமும் உடையவராய் சிறந்த நூல்கள் பலவற்றை இயற்றிப் புகழை நிலை நாட்டிய **சூரிய நாராயண சாஸ்திரியார்** அவர்களைப்பற்றி நாம் அறிந்து கொள்வோம்.

மதுரைக்கு அருகில் **விளாச்சேரி** என்று ஒரு கிராமம் இருக்கிறது. அவ்வூரில் **கோவிந்த சிவனர்** என்ற பெயர் உள்ள அந்தணப் பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் நற்குணமும் நல்லொழுக்கமும் வாய்ந்த பெரியார். அவருடைய இரண்டாவது குமாரராக சூரிய நாராயண சாஸ்திரியார் 1870-ஆண்டு பிறந்தார். குழந்தைப் பருவத்தில் குழந்தைகளுக்கு இருக்கவேண்டிய குணம் எல்லாம் அமைந்து பெற்றோர் மகிழவிளங்கினர். பிறகு இளமைப் பருவம் உண்டானவுடன் கல்வியில் கருத்தும், அண்ணனிடம் அன்பும், தந்தையிடம் அடக்கமும், மற்றவரிடம் மரியாதையும் உடையவராக விளங்கினர். 'விளையும்பயிர் முளையிலே தெரியும்' என்ற பழமொழிக்கு ஏற்ப எதிர் காலத்தில் பேரறிஞராகத் திகழ்வார் என்பதை விளக்க எப்பொழுதும் புத்தகங்களைப் படித்துக் கொண்டே இருப்பார். மதுரையிலிருந்த உயர் நிலைப் பள்ளியில் சேர்ந்து படித்துக் கொண்டு வந்தார். அப்பொழுது மதுரையில் **மகா வித்துவான் சபாபதி**

முதலியார் என்று ஒரு பெரியார் இருந்தார். தமிழில் அவர் பெரும் புலவர். ஆங்கிலமும் வடமொழியும் நன்கு கற்றுணர்ந்தவர். அப்பெரியார் மதுரையில் பல இளைஞர்களுக்குத் தமிழ் கற்றுக் கொடுத்து வந்தார். அப்பெரியாரிடம் சூரியநாராயண சாஸ்திரியார் தமிழில் புலமை பெறச் சென்றார். சபாபதி முதலியார் அவர்கள் தமிழைப் போதித்த முறையில் சாஸ்திரியார் பெரிதும் ஈடுபட்டார். ஆராய்ச்சித் திறமையும், கவிபாடும் ஆற்றலும், கேட்போர் விரும்பப் பேசுவதும், படிப்பவர் மகிழ எழுதுவதும் எல்லாம் சாஸ்திரியாருக்கு ஏற்பட்டன.

சாஸ்திரியார் அறிவுப் பயிற்சியுடன் உடற்பயிற்சியிலும் உற்சாகம் உடையவராய் இருந்தார். உடலை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டால்தான் நல் அறிவு பெறுவதின் பயனை நாம் அனுபவிக்க முடியும் என்று எண்ணிய அவர் பள்ளிக்கூடத்து விளையாட்டுப்போட்டிகளில் சேர்ந்து பல பரிசுகள் பெற்றார். அவர் மதுரையில் சீரும் சிறப்பும் பெற்ற **விஸ்வநாத முதலியார்** என்பவரிடம் தலையாய நட்பு கொண்டார். நல்லவர் நட்பு நாள்தோறும் வளர்பிறைச் சந்திரனைப்போல வளர்ந்து கொண்டே செல்லும் அல்லவா? விஸ்வநாத முதலியார் சாஸ்திரியாருடைய அறிவின்திறமையைக்கண்டு வியந்து அவரைத் தமது செலவிலேயே சென்னையில் உள்ள கிறிஸ்தவக் கல்லூரியில் சேர்த்தார். அப்பொழுது அக்கல்லூரியின் தலைவராக **டாக்டர் மில்லர்** என்பவர் இருந்தார். அவர் மாணவர்களிடம் மிகுந்த அன்புள்ளவர். அவருடைய அன்பின்சிறப்பினால் அக்கல்லூரியில் படித்த

மாணவர்கள் அனைவரும் பல துறைகளிலும் பெருமை பெற்ற பேரறிஞர்கள் ஆனார்கள். சாஸ்திரியார் அக் கல்லூரியில் படித்த மாணவர்களில் மிகவும் இளைஞர். அப்படி இருந்தும் பி. ஏ. பரீட்சையில் தமிழிலும் வேதாந்தத்திலும் முதல்வராகத் தேறினார். தமிழில் முதன்மையாகத் தேறுகின்றவருக்கு என்று ஒரு பரிசு பாஸ்கர சேதுபதி அவர்களால் ஏற்படுத்தப்பட்டது. அப்பரிசை இளைஞராயிருந்த சாஸ்திரியார் பெற்றார். அப்பொழுது சென்னையில் தமிழ் நூல்கள் பலவற்றைப் பதிப்பித்து வெளியிட்ட **சி. வை. தாமோதரப் பிள்ளை** என்பவர் இருந்தார். அவர் சேதுபதி அவர்களின் தமிழ்ப் பரிசைப் பெற்றவர்களைப் பரீட்சை செய்து பார்ப்பது வழக்கம். அவ்வாறே சாஸ்திரியாரும் அவரால் பரீட்சை செய்யப் பெற்றார். சாஸ்திரியாரின் தமிழ்ப் புலமையைக் கண்ட தாமோதரம் பிள்ளை அவரை மிகவும் சிறப்பித்துப் பாராட்டி வாழ்த்தினார். அவர் **திராவிட சாஸ்திரி** என பட்டமளித்து அவரைச் சிறப் பித்தார்.

பிறகு சாஸ்திரியார் கிறிஸ்த்தவக் கல்லூரிலேயே தமிழாசிரியராக நியமிக்கப்பட்டார். அவர் தமிழாசிரிய ராய் இருக்கும் பொழுது அக்கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த மாணவர்கள் தமிழ் ஆர்வம் பெற்று விளங்கினர். இவர் தமது சூரியநாராயண சாஸ்திரி என்னும் வடமொழிப் பெயரை **பரிதிமாற்கலைஞன்** என்னும் தனித் தமிழ்ப் பெயராக மாற்றிக்கொண்டார்.

(பரிதி = சூரியன் ; மால் = நாராயணன் ; கலைஞன் = சாஸ்திரி.)

இவ்வாறு தமது பெயரை மாற்றிக் கொண்ட சாஸ்திரியார் தமிழ் மொழிக்குப் பெருமைதரும் பல நூல்களை இயற்றினர். 'மதிவாணன்' என்ற மாண்பு மிக்க நூலையும், மானவிஜயம், கலாவதி, ரூபாவதி என்ற மூன்று நாடக நூல்களையும் இயற்றினர். தமிழில் உயர்ந்த நாடக நூல்கள் இல்லாத குறையை நீக்கி ஏற்றம் அளிக்கவே மேற்கண்ட நூல்களை அவர் எழுதினர். அன்றியும் நாடக இலக்கண ஆராய்ச்சியில் ஈடுபட்டு நாடக இயல் என்னும் ஒரு சிறந்த நூலையும் எழுதினர். பரிதிமாற்கலைஞன் என்ற புனைபெயரோடு 'தனிப்பாசுரத் தொகை' என்ற ஒரு சிறந்த நூலை வெளியிட்டார். பாவலர் விருந்து, தமிழ் மொழி வரலாறு முதலிய நூல்களும் எழுதியுள்ளார். ஞானபோதினி, விவேக சிந்தாமணி என்ற பத்திரிகைகளில் அவர் எழுதி வந்த கட்டுரைகள் மிகச் சிறப்புற்றனவாக இருக்கின்றன.

இங்ஙனம் தமிழ்த் தாய்க்குப் பல புதிய அணிகள் செய்து அழகு படுத்திய தமிழ்த் தொண்டர் சூரிய நாராயண சாஸ்திரியார் தமது இளமைப் பருவத்திலேயே அதாவது முப்பத்து மூன்ருவது (1903-ம் ஆண்டு) வயதிலேயே நோய்வாய்ப்பட்டு மண்ணுலக வாழ்வைத் துறந்தார்.

இயல் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் இவர் செய்த சிறந்த செயல்களை என்றும் மறுத்தல் இயலாது. அவர் புகழ் தாய்மொழி உள்ள அளவும் மறையாது என்பதில் ஐயம் உண்டோ ?

## அருஞ்சொற் பொருள்

புலமை—அறிவு, திகழ்வார்—விளங்குவார், மாண்பு—பெருமை,

## வினாக்கள்

1. சூரியநாராயண சாஸ்திரியார் பிறந்த ஊர், தந்தை பெயர் இவற்றை எழுது.

2. சாஸ்திரியார் இளமையில் யார் யாரிடம் எவ்வாறு நடந்து கொண்டார்?

3. சாஸ்திரியார் யாரிடம் தமிழ் பயின்றார்?

4. சாஸ்திரியார் என்ன பட்டத்தை எப்பொழுது யாரிடம் பெற்றார்?

5. சாஸ்திரியார் தமது பெயரை எவ்வாறு மாற்றிக் கொண்டார்?

6. சாஸ்திரியார் இயற்றிய நூல்கள் யாவை?

7. டாக்டர் மில்லர், தாமோதரம் பிள்ளை, விசுவநாத முதலியார் இவர்களைப் பற்றிச் சிறு குறிப்பு எழுது.

## பயிற்சிகள்

1. இப்பாடத்திலிருந்து வினைமுற்றுக்கள் இரண்டை எடுத்து எழுது.

2. இயற்றினர், எழுதினர்,—இவற்றிற்கு உறுப்பிலக்கணம் எழுது.

3. பத்திரிகைகளில் அவர் எழுதிவந்த கட்டுரைகள் மிகச் சிறப்புற்றனவாக இருக்கின்றன—இவ்வாக்கியத்தில் உள்ள எழுவாய் பயனிலைகள் எவை?

# 8. நிலவின் அதிசயம்

சிறுவர்கள் எல்லோருக்கும் நிலா என்ருல் மிகவும் ஆனந்தம் உண்டாவது இயற்கையே. இரவிலே நிலா ஆகாயத்திலே தாரைகைகள் சூழப் பவனி வருவதை நீங்கள் பலதடவை கண்டிருப்பீர்கள். சிறுவயதில் நீங்கள் நிலாவைப் பற்றிப் பலவிதமாக எண்ணியிருப்பீர்கள். ஆனுல் உங்களில் பெரும்பாலோருக்கு இன்றைக்கும் நிலாவைப்பற்றிச் சரியாகத் தெரியாதல்லாவா? நிலவுக்கு மதி, சந்திரன், திங்கள், அம்புலி முதலான பல பெயர்கள் உண்டு என்பதை முதலில் தெரிந்து கொள்ளுங்கள்.

நிலாவைப்பற்றி ஆராய ஆரம்பித்த பழங்கால மக்கள் பலவிதமான செய்திகளைக் கூறினர். நிலாவிலே முயல், பூனே, தவளே போன்ற பிராணிகள் இருப்பதாகக் கதைகள் கூறினர். நிலாவிலே ஒரு கிழவி ஆப்பம் சுடுவதாகக்கூட கதை கேட்டிருப்பீர்கள். மேலும் நிலாவின் தரை பளபளப்பான கண்ணுடியைப் போன்றது என்றும், அதில் தோன்றும் கரும்புள்ளிகள் பூமியின் பிரதிபலிப்புகளே ஆகும் என்றும் கூறிவந்தனர். எவருக்கும் நிலாவைப்பற்றியே உண்மையான செய்திகள் 1609-ஆம் ஆண்டுவரை தெரியாமலிருந்தது.

1609-ஆம் ஆண்டு காலிலியோ என்னும் இத்தாலிய விஞ்ஞானி தாம் கண்டு பிடித்த தூரதரிசினியின் உதவியால் நிலாவை ஆராய்ந்தார். அதன் விளைவாக நிலாவில்

காணப்படும் கரும்புள்ளிகள் மலைகளும், பள்ளத்தாக்கு களுமே என்று அவர் முடிவு கட்டினார்.

அந்த ஆண்டு முதல் நிலாவைப்பற்றிய உண்மை கள் புது தூரதரிசினிகள் கண்டு பிடிக்கப் படுந்தோறும் வெளிவரலாயின. ஐம்பது மைல்களுக்கு அப்பால் நிலா இருந்தால் நமது கண்களுக்கு எப்படித் தோன்றுமோ அதைப்போலவே நிலாவை நாம் இன்று தூரதரிசினி கள் மூலம் காணமுடிகிறது.

பூமிக்கு அண்மையில் இருக்கும் கிரகம் சந்திரனே. சந்திரன் பூமியைச் சுற்றுகிறது; பூமி தன்னைத்தானே சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றி வருகிறது. சந்திரன் பூமியைச் சுற்றும்பொழுது வட்டவடிவமான பாதையில் சுற்றுமல் முட்டை வடிவமான பாதையில் சுற்றுகிறது. பூமிக்கு அருகில் நிலா வரும்பொழுது பூமியை இழுக்கும் சக்தி அதற்கு அதிகரிக்கிறது. அதன் விளைவாகத்தான் கடலிலே கொந்தளிப்பு அதிகப்படுகிறது. சந்திரனுக் கும் பூமிக்கும் இடையிலுள்ள சராசரி தூரம் 240,000 மைல்கள். மற்ற எல்லாக் கிரகங்களும் பூமிக்குச் சந்தி ரனைக் காட்டிலும் பன்மடங்கு தூரத்தில் உள்ளன.

பூமியைச் சுற்ற நிலாவிற்கு ஏறக்குறைய இருபத்தி ஒன்பது நாட்களும் பன்னிரண்டு மணி நேரமும் பிடிக் கிறது. நிலாவின் குறுக்களவு 2160 மைல்களாகும். இந்த அளவானது பூமியின் குறுக்களவின் நான்கில் ஒரு பங்கைவிட சற்று அதிகமானதாகும், மேலும் நிலா வின் எடையானது பூமியின் எடையில் எண்பதில் ஒரு பங்காகும்.

பூமியில் நீங்கள் மேலே எகிறிக் குதித்தால் மீண்டும் தரைக்கே வருகிறீர்கள் அல்லவா ? காரணம் என்ன ? பூமிக்கு இழுக்கும் சக்தி இருக்கிறது. அதைப் போலவே சந்திரனுக்கும் இழுக்கும் சக்தி இருக்கிறது. ஆனால் பூமியின் இழுக்கும் சக்தியில் ஆறில் ஒரு பங்கு சக்தியே சந்திரனிடம் இருக்கிறது. பூமியிலே நான்கடி உயரம் தாண்டுபவர்கள் சந்திரனிலே இருபத்து நான்கு அடி உயரம் தாண்டுவார்கள். பூமியில் 120 பவுண்டு எடை உள்ளவர்கள் நிலாவிலே 20 பவுண்டு எடை உள்ளவர்களாகத்தான் காணப்படுவார்கள்.

நிலாவின் மேற்பரப்பு வறண்ட தன்மை வாய்ந்ததாகும். அங்கு ஏகாந்தமும் நிரந்தர அமைதியும் எப்பொழுதும் உள்ளன. நிலாவில் காற்றும் கிடையாது ; தண்ணீரும் கிடையாது. காலிலியோ முதன் முதலாகத் தூரதரிசினியின் மூலமாக நிலாவைப் பார்த்தபொழுது அதிலே சமுத்திரங்கள் இருப்பதாகக் கூறினர். ஆனால் அவர் நீர்ப்பரப்புகளாகக் கூறியவைகள் பெரிய சமமான வறண்ட பாறைச் சமவெளிகளே என்று இப்பொழுது நிரூபிக்கப்பட்டுள்ளது.

நிலாவிலே எத்தகைய உயிர்ப் பொருள்களும் இருக்கமுடியாது. அங்கு காற்றும் கிடையாது ; தண்ணீரும் கிடையாது. ஓடும் ஆறுகளையும், வீசும் காற்றையும், மோதும் அலைகளையும் அங்குக் காணமுடியாது.

நிலாவின் மேற்பரப்பானது கரடுமுரடான கற்பாறைகளையே எங்கும் கொண்டுள்ளது. பூமியின் மேற்பரப்பு பல இடங்களில் உடைபட்டுப் பலப்பல இடங்

களில் வட்ட வடிவங்களாகக் காணப்படுகிறது. இந்தக் கற்பாறை வட்ட வடிவங்கள் எரிமலையின் வாயைப் போல காணப்படுவதால் இவைகளுக்குக் "கிரேடர்"கள் என்று பெயர். இவைகளில் சில 100 மைல்களுக்கு மேலும் குறுக்களவுடையனவாய் உள்ளன. நிலாவில் மொத்தம் 32,000 கிரேடர்கள் இருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. சில இடங்களில் கிரேடர் பள்ளத் தாக்குகள் மலைகளால் சூழப்பட்டுள்ளன. கிரேடர்கள் நிலாவில் நெருக்கமாக இருக்கின்றன. சிலர், கிரேடர்கள் எரிமலையின் விளைவுகள் என்றும், நிலா ஒரு காலத்தில் அனல் கக்கும் எரிமலையாக விளங்கியிருக்க வேண்டும் என்றும் கூறுவர். ஆகாயத்திலே எண்ணிறந்த கோளங்கள் சுழன்றுகொண்டே இருக்கின்றன. அவை ஆதி காலத்திலே நிலாவில் சென்று பாய்ந்து கிரேடர் பள்ளத் தாக்குகளை யுண்டாக்கி இருக்கவேண்டும் என்று சிலர் சொல்லுவர். எரிமலையின் விளைவாகச் சில கிரேடர் பள்ளத்தாக்குகளும், கோளங்கள் சென்று விழுவதால் சில கிரேடர் பள்ளத்தாக்குகளும் நிலாவில் ஏற்பட்டிருக்கும் என்று கூறுவாரும் உளர்.

அடுத்தபடியாக நிலாவிலே பத்து மலைத்தொடர்கள் காணப்படுகின்றன. அவைகள் மிகவும் கரடு முரடான பாறைகளால் ஆனவை. சில சிகரங்கள் 5,000 அடிகளும், சில 10,000 அடிகளும், சில 15,000 அடிகளும் உயர்ந்துள்ளன. மற்றுஞ் சில சிகரங்கள் இன்னும் அதிக உயரமாய் இருக்கின்றன. ஒரு மலைத்தொடர் 640 மைல் நீளமிருக்கின்றது. அதிலே மூவாயிரத்திற்கு மேற்பட்ட சிகரங்கள் காணப்படுகின்றன. நிலாவிலே

நீண்ட பாறைத் தொடர்களும் குறுகிய ஆழமான நீண்ட பள்ளத்தாக்குகளும் உள்ளன.

நிலாவின் மேற்பரப்பின் முக்கியதன்மை என்ன வென்றால் அதிலே காணப்படும் வெடிப்புகளேயாம். இவற்றின் அகலம் அரைமைல்; நீளம் சில இடங்களில் நூறு மைல்களுக்கு மேலும் செல்லுகிறது. மலைகளையும் பள்ளத்தாக்குகளையும் பிளவுகள் ஊடுருவிச் செல்லு கின்றன. இத்தகைய வெடிப்புகள் நிலாவிலே நிறைய இருக்கின்றன.

நிலாவின் சூட்டை அளப்பதற்குத் "தெர்மோக பள்" என்ற ஒரு மின்சார சூட்டளவைக் கருவி உபயோ கப்படுத்தப்பட்டது. நிலா தன்னைத்தானே மெதுவாகச் சுற்றிக்கொள்வதால், நிலாவில் உள்ள ஒரு பொருளா னது இரவும் பகலும் சேர்ந்த நம்முடைய பதினன்கு நாட்களுக்குச் சூரிய வெளிச்சத்தில் இருக்கிறது. அதைப் போலவே பதினன்கு நாட்களுக்கு அப்பொருள் இரு ளில் இருக்கிறது. பகல் காலத்தில் நிலவின் உஷ்ண மானது 212 டிகிரி பாரன்ஹீட் வரைக்கும் செல்லு கிறது. அதாவது அந்தச் சூட்டில் தண்ணீர் வெந்நீராக மாறிக்கொதிக்கும். இரவிலே அதன் உஷ்ணம் - 200 டிகிரிகள் வரைக்கும் இறங்கிவிடுகிறது. அதாவது சைபர் டிகிரிக்கும் கீழே தண்ணீரானது 32 டிகிரியிலேயே பனிக்கட்டியாக உறைந்து விடுகிறது.

நீலநிற வானத்திலே நீந்தி விளையாடும் வெண்மதி யாகிய நிலாவைப் பொழுது போக்குக்காக ஆராய்பவர் கள் ஆராய முற்பட்டால் எவ்வளவோ ஆச்சரியங்களைக்

காணலாம். நிலவை ஆராய்வதற்கு வளர்பிறையில் ஆறுவது நாளிலிருந்து பத்தாம் நாள்வரை உள்ள நாட்களே ஏற்ற காலமாகும்.

## அருஞ்சொற் பொருள்

தாரகை—நட்சத்திரம், அண்மை—சமீபம், நிரந்தரம்—எப்பொழுதும், அனல் — நெருப்பு, கோளம் — உருண்டை, சிகரம்—உச்சி, ஊடுருவி—இடையே பிளந்துகொண்டு.

## வினாக்கள்

1. நிலாவைப் பற்றி முற்காலத்தில் வழங்கப்பட்ட கதைகள் எவை?

2. நிலாவைப் பற்றி முதன் முதலில் ஆராய்ச்சி செய்தவர் யார்? எவ்வாறு ஆராய்ந்தார்? அவர் கண்ட முடிவு என்ன?

3. பூமிக்கு அண்மையிலுள்ள கிரகம் எது? அதற்கும் சூரியனுக்கும் உள்ள தூரம் என்ன?

4. பூமியைச் சந்திரன் ஒருமுறை சுற்ற எவ்வளவு நாட்கள் ஆகும்?

5. பூமிக்கும் சந்திரனுக்கும் உள்ள இழுக்கும் சக்தியின் இயல்பினை விளக்கு.

6. நிலாவின் மேற்பரப்பின் அமைப்பை விளக்கு.

7. தூரதரிசினியின் மூலம் சந்திரனைக் கண்டால் அதில் பார்க்கக்கூடிய அதிசயங்களை எழுது.

8. நிலாவின் சூட்டைக் கண்டுபிடிக்கப் பயன்படுத்தும் கருவியின் பெயர் என்ன?

9. நிலாவிற்கு வழங்கும் வேறு பெயர்கள் எவை?

## கட்டுரைப் பயிற்சி

1. "நிலாவின் அதிசயம்". என்பதைப் பற்றி ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் எழுது.

## மொழிப் பயிற்சி

1. காலிலியோ என்பவர் தாம் கண்டுபிடித்த தூரதரிசினியின் உதவியால் நிலாவைப்பற்றி ஆராய்ந்தார்—இவ்வாக்கியத்தில் வேற்றுமை உருபுள்ள சொற்களை எடுத்தெழுது.

2. பகுபத உறுப்புகள் எழுது :—

கூறுவர், நின்றான், செய்கிறாய்,

3. பூமி, நிலா—இவ்விரண்டு சொற்களுடன் இரண்டாம் வேற்றுமை முதல் எட்டாம் வேற்றுமை வரையும் உள்ள உருபுகளைச் சேர்த்து எழுது.

# 9. புத்த பெருமான்

"பூரண ஞானம் பொலிந்த நன்னாடு
புத்தர் பிரான் அருள் பொங்கிய நாடு
பாரத நாடே பழம்பெரும் நாடு
பாடுவம் இதை எமக்கு இலை ஈடே"

என்று கவிஞர் பாரதியார் நம் நாட்டின் பெருமையை நன்றாக விளக்கி உள்ளார். ஆம்! நாமனைவரும் இந் நாட்டில் மக்களாய்ப் பிறந்தமைக்காக மகிழத்தான் வேண்டும். எல்லையிலா இன்பங் கொள்ளவேண்டும். **புத்தர், விவேகானந்தர், இராமகிருஷ்ணர், மகாத்மா காந்தி அடிகள்** முதலான பெருமக்கள் தோன்றி நாம் பிறந்த நாட்டின் பெருமையைப் பலநாடுகளிலும் பரவச் செய்தனர் அல்லவா ? புத்தரால் ஏற்படுத்தப்பட்ட புத்த மதம் சீனம், ஜப்பான், இலங்கை முதலிய பல நாடுகளிலும் பரவி இன்றும் நிலை பெற்று இருக்கவில்லையா ?

அறியாமையாகிய இருளில் அகப்பட்டுக் கொண்டு துன்பமுற்றுக் கொண்டிருந்த ஆசிய மக்களுக்கு ஓர் அறிவுச்சுடராகத் தோன்றி ஒளி காட்டி நல்வழிப் படுத்தி நலமடைய நன்னெறி காட்டிய காரணத்தினால் புத்தரை 'ஆசிய ஜோதி' என்று அழைக்கிறார்கள். என்றும் தூண்டாத மணி விளக்காய், சுடர் விளக்காய் பிரகாசித்துக் கொண்டிருக்கும் புகழ்மிக்க ஆசிய ஜோதியை நாமும் அவ்வாறே போற்றுவோம். அவரைப்பற்றியும் அறிந்து கொள்வோம்.

**கபிலவஸ்து** என்னும் நகரத்தில் **சுத்தோதனன்** என்ற சாக்கிய குல அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவனுக்கு **மாயாதேவி, கௌதமி** என்னும் இரு மனைவியர் இருந்தனர். அவனிடம் அளவற்ற செல்வமும் இருந்தது. அன்பும் அருளும் மிகுந்து அறநெறி தவருமல் ஆட்சி செலுத்தி வந்தான். எல்லாச் செல்வமும் இருந்தும் அம் மன்னனுக்கு நெடு நாட்களாகக் குழந்தையில்லாத குறை ஒன்று மாத்திரம் பெருங்குறையாக இருந்து வந்தது. நெடு நாட்கள் சென்ற பிறகு மன்னன் சுத்தோதனன் மனம் மகிழ மாயாதேவிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்நாட்டு மக்கள் அடைந்த மகிச்ழ்சிக்கு அளவேயில்லை. எங்கும் மன்னனுக்கு மகன் பிறந்த செய்தி கேட்டு மாபெரும் விழாக்களும் ஆடல் பாடல்களும் நடைபெற்றன. உலகத்திற்கே நல்லறிவுச் சுடர் கொளுத்தும் நாயகன் பிறந்தான் என்று புகழ்ந் தேத்தினர். அக்குழந்தைக்கு **சித்தார்த்தர்** என்று



புத்த பெருமான்

பெரியோர்கள் பெயரிட்டனர். **கௌதமர்** என்ற பெயரும் அவருக்கு வழங்கலாயிற்று.

சித்தார்த்தர் அரச குடும்பத்தில் பிறந்ததற்கு ஏற்பச் சிறந்த முறையிலேயே செம்மையாக வளர்க்கப்பட்டார். கல்வி கற்கும் பருவம் வந்தவுடன் கலைகள் அனைத்தும் கற்பிக்கப் பெற்ருர். வாழ்க்கையில் காணப்படும் எந்த விதமான இன்னல்களையும் அவர் கண்டதில்லை. இன்பமாக வளர்ந்து வந்தார்.

அவருக்கு **யசோதரை** என்னும் எழில்மிக்க மங்கையை மணம் செய்வித்தனர். அந்நாட்டின் இளவரசராகவும் பட்டம் சூட்டப்பட்டார். உலகம் இன்பமயமாகவே இருக்கும் என்று சித்தார்த்தர் சிந்தித்துக் கொண்டிருந்தார். எங்கு நோக்கினும் இன்னல் மிகுந்த கொடுமைக் காட்சியே உண்டு என்பதை அவர் கண்டிலர். ஆயினும் ஒரு முறை அவர் வெளியே சென்று வரும் பொழுது பிணியாளன் ஒருவனைக் கண்டார். உலகில் மக்களுக்கு கடும்பிணிகள் உண்டாகும் என்பதை அறிந்திராத அவர் அன்று முதல் கவலை மிகுந்து கடுந்துன்பத்தில் மூழ்கினுர்.

மற்ருெரு நாள் அவர் ஒரு வயோதிகன் ஒருவனைக் கண்டார். அப்பொழுது அவருக்கு மக்கள் அனைவரும் முதுமைப் பருவத்தை அடைந்து துயர் உறவேண்டும் போல் இருக்கிறது என்று எண்ணி ஏங்கினுர்.

பின் ஒரு நாள் அவர் ஒரு பிணத்தைக் கண்டார். அப்பொழுதுதான் அவருக்கு உலகில் பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி என்னும் உண்மை புலனுயிற்று. அன்று அவருடைய மனத்தில் அளவற்ற சிந்தனைகள்

உண்டாயின. மூப்பு, பிணி, சாக்காடு என்னும் மூன்று பெரிய ஆபத்துக்களிலிருந்து மக்கள் பிழைக்க முடியாதா என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அவருடைய உள்ளத்தில் நாளுக்குநாள் வாழ்க்கையில் வெறுப்பு உண்டாயிற்று. அதனால் நாட்டையும் தன் அருமை மனைவி யசோதரையையும், அப்பொழுதுதான் பிறந்த அருமை மகன் இராகுலனையும், பெற்றோரையும் மற்றோரையும் விட்டுப் பிரிந்து ஒருவருக்கும் தெரியாமல் காட்டிலும், மலையிலும் அலைந்து சென்று கடுந்துறவியானார். கடைசியில், அவர் ஒரு போதி மரத்தின் கீழ் உட்கார்ந்து ஆத்ம தியானம் செய்யும் போது, அவருக்கு ஞான உதயம் உண்டாயிற்று. அது முதல் அவருக்குப் புத்தர் என்ற பெயரும் வழங்கலாயிற்று.

சித்தார்த்தர் இவ்வாறு நாடு நகரங்களையும், மனைவி மக்களையும், அரசாட்சியையும் துறந்து நாட்டை விட்டு வெளியேறிய செய்தி நாடு முழுவதும் பரவிற்று. கேட்டோர் கலங்கினர். ஆனால் என்ன ? அவர் கொல்லாமை, திண்டாமை முதலிய உண்மை மார்க்கங்களை உலகத்தார்க்கு உணர்த்தி வந்தார். அவரால் உபதேசிக்கப்பட்டு வந்த அறிவுரைகள் எல்லாம் பெரும்பாலும் எல்லோராலும் போற்றப்பட்டன. அவருடைய உபதேசங்களைப் பின்பற்றிய பலர் அவருடைய உண்மை மாணவர்களாய் விளங்கி உலகெங்கும் அவர் உபதேசங்களைப் பரப்பி வந்தனர். அதனால் புவி முழுவதும் புத்தர் புகழ் பரவிற்று. அவ்வாறு அவர் புகழை மேலும் பரவச் செய்து அவர் கொள்கைகளை அப்படியே பின்பற்றி வளர்த்தவர்களில் அவனி புகழும் **அசோக சக்கரவர்த்தி** தலை சிறந்தவராவார்.

அசோகர் புத்தர்பிரானின் பொன்னுரைகளை அறிஞர்கள் மூலம் ஒவ்வொரு நாட்டிற்கும் பரவச் செய்ததோடு அல்லாமல் ஆங்காங்கே அவற்றைக் கல்லில் பொறிந்து என்றும் அழியாதிருக்குமாறு செய்து சிறப்பினைப் பெற்றார்.

இவ்வாறு வையகம் போற்ற மெய்யுரை புகன்று மக்கள் உய்யும் வகை காட்டி, அரும் செயல்களை பல செய்த புத்தபிரான்—முடமான ஆட்டுக் குட்டியை முதுகில் சுமந்து சென்று அதைக் காப்பாற்றிய அருள் வள்ளல் புத்தர் பெருமான்—வேடன் ஒருவன் அன்னத்தின் மீது அம்பு எய்ய அதைக் கண்டு தாளாது மனம் வருந்தி அதை அன்போடு அணைத்து அதன் துயரைப் போக்க முயன்ற கருணை வள்ளல் கெளதமர்—யாகசாலை நடுவில் நூற்றுக் கணக்கான ஆடுகளின் உயிர்களைக் காப்பாற்றி மன்னனுக்கு மதி புகட்டிய மாபெரும் இரக்கம் கொண்ட சித்தார்த்தர்—தான் தீண்டத் தகாதவன் என்று கூறிய ஆயர்குலச் சிறுவனிடம் "பிறப்பினால் உயர்வு தாழ்வு கிடையாது; எல்லோருடைய உடலிலும் ஓடும் ரத்தம் ஒரே தன்மையுடையதுதான்; அதனால் உயர்வும், தாழ்வும் நமக்குள் வேண்டாம். உண்மையாக நடப்பவனே உயர்ந்தோன்; உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசித் தீவினைகள் பல செய்து திரிகின்றவனே தாழ்ந்தவன்" என்று நல்லுரை புகட்டிய புத்தபெருமான் வரலாறு இளைஞர்களெல்லோரும் அறிந்து கொள்ள வேண்டியதாகும். அறிந்து அவருடைய பொன்னுரைகளைப் பின்பற்றி நடப்பது எல்லோருக்கும் ஏற்றதாகும்.

புத்தர் புகழ் நித்தமும் வளர்க.

## அருஞ்சொற் பொருள்

பாடுவம்—பாடுவோம், ஈடு—ஒப்பு, நாயகன்—தலைவன், எழில்—அழகு, முதுமைப்பருவம்—கிழப்பருவம், சிந்தனை—எண்ணம், துறந்து—வெறுத்து, மார்க்கம்—வழி, புவி—உலகம் முடம்—நொண்டி, அவனி—உலகம், பொறித்து—எழுதி, (செதுக்கி), எய்ய—எறிய.

## வினாக்கள்

1. பாரதியார் நம் நாட்டின் பெருமையை எவ்வாறு கூறியுள்ளார்?

2. 'நாம் இந்நாட்டில் பிறந்தமைக்கு மகிழவேண்டும்' ஏன்?

3. ஆசிய ஜோதி என்று அழைப்பது யாரை? ஏன்?

4. புத்தருடைய தாய் தந்தை பெயர்களை எழுது. புத்தருக்கு வழங்கும் வேறு பெயர்கள் யாவை?

5. சித்தார்த்தர் உலக வாழ்வில் வெறுப்பு அடைந்தமைக்குக் காரணங்கள் எவை?

6. வாழ்க்கையின் நிலையில்லாத் தன்மையை உணர்ந்த புத்தர் என்ன செய்தார்?

7. புத்தர் அறவுரையைக் கேட்டு அவரை குருவாகக் கொண்டு தொண்டாற்றிய மன்னர் யார்? அவர் எங்ஙனம் புத்தர் உபதேசத்தைப் பரப்பினர்?

8. புத்தர் செய்த கருணைமிக்க செயல்களை எழுது.

9. 'நான் தீண்டத்தகாதவன்' என்ற ஆயர்குலச் சிறுவனுக்குப் புத்தர் கூறிய நல்லுரைகளை எழுது.

## பயிற்சிகள்

1. பெருமக்கள் பலர் தோன்றி நாம் பிறந்த இந்நாட்டின் பெருமையை உலகறியச் செய்தனர் அல்லவா? இது என்ன வாக்கியம்? இவ்வாக்கியத்திலுள்ள பெயரெச்சம், வினையெச்சம், வினை முற்றுக்களை எடுத்து எழுது.

2. கொள்வோம், புகழ்ந்தேத்தினர், வளர்க்கப்பட்டார்—இவற்றை ஒருமைச் சொற்களாக மாற்றி எழுது.

3. வெறுப்பு, உண்மை, மெய்யுரை, புறம்—இவற்றுக்கு எதிர்ப்பதங்கள் எழுது.

4. புலனுயிற்று, கண்டிலர், தாளாது — வாக்கியத்தில் அமைத்து எழுது.

---

# 10. பாங்குகள்

பரந்த உலகம் விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் குறுகியதாக ஆகிவிட்டது. வான ஊர்திகளும், வானொலி யும், டெலிபோனும் பிறவும் ஓரிடத்திற்கும் மற்றோர் இடத்துக்கும் உள்ள தூரத்தைக் குறைத்து விட்டன. ஒருவன் சென்னை முதலான நகரங்களில் இருந்து உலகத் தின் எப்பகுதியிலும் இருக்கும் மக்களோடு, நேரில் பேசுவது போல் பேசும் வசதியைப் பெற்றிருக் கின்றான். இதனால் மக்களுடைய வாழ்க்கை முறை பல வகையிலும் மேன்மையடைந்தும் விரிவடைந்தும் வருகின்றது. இதனால் வியாபாரம், கைத்தொழில் வளர்ச்சி முதலியனவும் பெரிய மாறுதல்களைப் பெற் றுள்ளன. முன்பு வியாபாரம் என்பது ஓர் ஊரில் மிக எளிய முறையில் நடந்து வந்தது. ஒருவனிடம் உள்ள பண்டத்தை மற்றொருவனிடம் கொடுத்து அதற்குப் பதிலாகத் தனக்கு வேண்டிய பண்டத்தைப்பெறும் "பண்டமாற்று முறை"யில் நடந்து வந்தது. இம்முறை பெரும்பாலும் இப்பொழுது இல்லையென்றே சொல்ல லாம். வியாபாரம் அனைத்தும் இப்பொழுது பணத்தின் மூலமாக நடைபெறுகின்றது. ஒரு பொருளை வாங்கு பவன் அதற்கு உரிய விலையான பணத்தைக் கொடுத்து விட வேண்டும். பெரிய அளவில் நடத்தப்படுகின்ற வியாபாரத்தில் ஆயிரக்கணக்கான ரூபாய்களைக் கொடுக் கல் வாங்கல் செய்யவேண்டும். அப்பணத்தைக் கையில் எடுத்துக்கொண்டு செல்வது ஆபத்தானது. அதனால்

பணத்தைச் சேமிப்பாகச் சேர்த்து வைத்துத் தேவை யான போது பெற்றுக் கொள்ளும்படியான பொருள் நிலையங்களை ஏற்படுத்தியுள்ளனர். அதை இப்பொழுது பாங்குகள் (Banks) என்றும், வங்கிகள் என்றும் சொல்லுகின்றார்கள். இத்தகைய பாங்குகளைப் பற்றியும் அவற்றின் நடைமுறைகளைப் பற்றியும் இளைஞர்கள் தெரிந்து கொள்வது நல்லது.

முதன் முதலில் இங்கிலாந்து தேசத்தில் 17-ம் நூற்றாண்டில் பாங்கு ஏற்படுத்தப்பட்டது. அதற்கு முன், செல்வர்கள் பலர் தங்களுடைய பணத்தைத் தேவையானவர்களுக்குக் கொடுத்து வட்டி பெற்றுக் கொண்டு வந்தனர். சில முறை அவர்கள் அளவுக்கு அதிகமான வட்டியை, அதாவது இருபது, முப்பது சத வீதம் கடும் வட்டியை வாங்கினர். அதனால் மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாயினர். ஆதலின் இக்குறை பாட்டை ஒழித்து மக்களுக்கு நன்மை புரிவதற்காகவே 'பாங்க்' முறை ஏற்படுத்தப்பட்டது. பலரும் ஓரளவு முதற் பணம் போட்டு இலட்சக் கணக்கான ரூபாய் களைத் திரட்டி அவற்றைக் குறைந்த வட்டியில் மக்களுக் குக் கொடுத்து உதவினர். பாங்கு நடைபெறுவதற்கான செலவும், முதற்பணம் போட்டவர்களுக்குக் கொடுக்க வேண்டிய நியாயமான வட்டியும் கட்டி, வரும்படி விகிதம் ஏற்படுத்தி மக்களுக்கு உதவி செய்து வந்தனர். இம்முறை மிகமிக நல்ல முறையாக இருந்தமையினா லும், மக்களுக்கு நன்மையாக இருந்தமையாலும் நாள டைவில் பாங்குகள் உலகம் முழுவதும் ஏற்படுத்தப்பட் டன. இப்பொழுது உலகின் எப்பகுதியிலும் பாங்குகள்

இல்லாத இடமே இல்லை. இப்பொழுது பலரும் தங்களிடமுள்ள பணத்தைப் பாங்குகளில் போட்டுச் சேர்த்து வைக்கின்றனர். பாங்கு நிர்வாகிகள் அப்




பாங்கு அலுவலகம்

பணத்தைப் பெற்று, வட்டிக்குத் தேவையானவர்களுக்கு அவரவர்களுடைய நிலைமைக்கும் நேர்மைக்கும் தகுந்தவாறு கொடுத்து வருகின்றனர். அவர்கள் பாங்கில் பணம் போட்டவர்களுக்கும் ஒரு குறிப்பிட்ட சிறு அளவு வட்டி கொடுக்கின்றார்கள். அதனால் பாங்கு என்பது பலர் கொடுக்கும் பணத்தைக் குறைந்த வட்டிக்கு வாங்கி அதைவிடக் கொஞ்சம் அதிக வட்டியில் பலருக்கும் கொடுத்து, பண வியாபாரம் நடத்துகின்ற ஓர் இடம் என்று சொல்லலாம். பணமுள்ளவர் பலரும் பாங்குகளில் போடும் பணத்தை அப்படியே வைத்திருந்தால் பாங்கு எப்படி நடைபெறும்? பணம்

போட்டவர்களுக்கு வட்டி எப்படிக் கொடுக்க முடியும்? அதனால் மேலே சொன்ன முறையில் பாங்குகள் நடை பெற்று வருகின்றன.

**பாங்குகளில் பணம்போடும் முறைகள்:** பாங்கு களில் பணம் கட்டும்போது சேமிப்பு முறை என்றும், குறிப்பிட்ட கால அளவிற்குப் போட்டு வைத்திருக்கும் முறை (fixed deposit) என்றும், வேண்டிய பொழுது பணம் போடவும் எடுக்கவும் கூடிய நடைமுதற் கணக்கு (current account) என்றும் பல முறைகள் உள்ளன. இவற்றுள் அவரவர்கள் தங்களுக்கு ஏற்ற ஒன்றில் பணம் கட்டலாம். சேமிப்பு முறை எல்லோ ருக்கும் அவசியமானது. செலவு போக மீதியிருப்பதைக் கையில் வைத்துக் கொண்டிருப்பதைவிட பாங்குகளில் சேமித்து வைப்பது நல்ல முறையாகும். இம்முறை ஏழை பணக்காரர்கள் எல்லோருக்கும் ஏற்ற முறை. குறித்த கால அளவு முறை பெரும்பாலும் பணக்காரர் களுக்கு ஏற்றமுறை. இம்முறைக்கு வட்டி கொஞ்சம் அதிகம். ஒருவர் ஆயிரம் ரூபாயை இரண்டு வருடங் களுக்குள் கேட்பதில்லை என்று ஒரு பாங்கில் போட்டு விட்டால் அந்த இரண்டு ஆண்டுகள் கழித்த பிறகுதான் அத்தொகையை அவர் வாங்கமுடியும். அதற்குரிய வட்டிப்பணத்தை வேண்டுமானால் குறித்த காலத்தில் வாங்கிக் கொள்ளலாம். அல்லது மொத்தமாகச் சேர்த்துக் கடைசியில் வாங்கிக் கொள்ளலாம்.

**பாங்குகளிலிருந்து பணம் வாங்கும் முறை:—** ஒரு பாங்கின் அங்கத்தினருக்கு, அவர் பணம் பாங்கில்

கட்டிய உடனே 'செக்' புத்தகம் ஒன்று கொடுக்கப் படும். அதில் பல தாள்கள் இருக்கும். ஒவ்வொன்றிலும் எந்தப் பாங்கிற்கு உரிய செக் என்பது குறிக்கப்பட்டி ருக்கும். செக் என்பது பாங்கு நிர்வாகிக்கு, 'இன்னு ருக்கு அல்லது இந்த கம்பெனிக்கு இவ்வளவு தொகையை என்னுடைய கணக்கிலிருந்து கொடுக் கவும்' என்று தெரிவிக்கும்படியான ஓர் உத்தரவுச் சீட்டு ஆகும். இவ்வாறு செக்கின் மூலம் பணம் கொடுக்கும் முறை எவ்வளவோ கஷ்டங்களையும் ஆபத் துக்களையும் குறைத்துள்ளது. உதாரணமாக, ஒருவன் பம்பாயிலிருந்து சென்னைக்கு ஒரு பொருளை வரவழைக் கின்றான். அதற்காக ஐயாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்றால், இங்கிருந்து, தன்னுடைய பாங்கு செக்கை அந்தக் கம்பெனிக்கு அனுப்பிவிடுவான். அங்கே அச்செக்கை அக்கம்பெனிக்காரர் தங்கள் பாங் கில் போட்டுப் பணத்தை வாங்கிக்கொள்வார்கள். சில சமயங்களில் ஒருவருக்கு அனுப்பும் செக்கை வேறு ஒருவர் வாங்கி ஏமாற்றிவிடவும் கூடும். அதைத் தடுப் பதற்கு ஒரு முறை உண்டு. அதாவது செக்கில் ஒரு மூலையில் குறுக்காக இரு கோடுகள் போட்டுக் கொடுப் பார்கள். அதைக் குறுக்குக் கோடிட்ட செக் (crossed cheque) என்று சொல்லுவார்கள். இதைக் கொடுத்து நேராகப் பணம் வாங்கமுடியாது. பாங்கு கணக்கில் வரவு வைத்துப் பிறகுதான் பணத்தை வாங்கமுடியும். இம்முறையால் பணம் ஒழுங்காகக் குறிப்பிட்டவர்க்குச் சேரும்; எவரும் ஏமாற்ற முடியாது.

ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் நடை பெறும் வியாபாரத் துறையில் அனுப்பப்படும் செக்கு

களை மாற்றுவதற்குத் தனியாகச் சில பாங்குகள் உண்டு. அவற்றை "நாணயமாற்று" பாங்குகள் (Exchange Banks) என்று சொல்லுவார்கள். இந்தியாவில் அரசாங்க பாங்காக இருப்பது "ரிசர்வ் பாங்கு" என்பதாகும். அரசாங்கத்தின் பொருளாதார சம்பந்தமான எல்லா நிகழ்ச்சிகளையும் கவனிப்பது இதுவேயாகும். மற்றும் பல சிறியனவும் பெரியனவுமான பாங்குகள் இருக்கின்றன. அவைகளும் ஒழுங்காக நடைபெறுகின்றனவா என்று ரிசர்வ் பாங்கு கவனித்து வருகிறது. அதனால் நம் நாட்டில் ஒழுங்காக பாங்குகள் நடைபெற்று வருகின்றன.

இவற்றையெல்லாம் இளைஞர்கள் நன்ருக அறிந்து அவர்கள் பெரியவர்களான பிறகு பாங்குகளில் பணம் சேமித்து நன்ருக வாழ்ந்து தங்களுக்கும் நாட்டுக்கும் நன்மையை நாடுவார்களாக!

## அருஞ்சொற் பொருள்

நேர்மை—ஒழுங்கு, சேமித்து—சேகரித்து.

## வினுக்கள்

1. 'வியாபாரம் முதலியன இப்பொழுது பெரும் மாறுதல்களை அடைந்துள்ளன'—ஏன்?

2. முற்காலத்தில் வியாபாரம் எவ்வாறு நடைபெற்றது?

3. பாங்குகள் தோற்றுவிக்கப்பட்ட காரணம் என்ன? பாங்குகள் எவ்வாறு நடைபெறுகின்றன?

4. பாங்குகளில் பணம் போடும் முறையை விளக்கு.

5. பாங்குகளிலிருந்து பணம் வாங்கும் முறையை எழுது.

6. 'செக்' என்றால் என்ன ?

7. குறுக்குக் கோடிட்ட செக் (crossed cheque) கொடுப்பதின் நோக்கம் என்ன ?

8. ,நாணயமாற்று பாங்குகள்' என்றால் என்ன ?

9. ரிசர்வ் பாங்கு, பண்டமாற்று, நடைமுறைக் கணக்கு—குறிப்பு எழுது.

## பயிற்சிகள்

1. வைப்பார், வருகின்றன, கொண்டு - இவற்றிற்குப் பகுதி மாத்திரம் எழுது.

2. கொடுப்பார், கொள்வார் இவ்விரண்டு வினைமுற்றுக்களையும் பெயரெச்ச, வினையெச்சங்களாக மாற்றி வாக்கியத்தில் அமைத்து எழுது.

3. பின்வரும் சொற்களில் பெயரெச்ச, வினையெச்சங்களை எடுத்தெழுது: —

கவனித்து, சேமித்து, போடும், சொன்ன, கொடுக்கும், வைத்து, நடத்துகின்ற.

---

# 11. வள்ளல் பாரி

## நாடகம்

[கடை ஏழு வள்ளல்களுள் ஒருவர் என்று போற்றப்படும் பாரி, முல்லைக் கொடிக்குத் தேரீந்த வரலாறு சிறு நாடகமாக எழுதப்பட்டுள்ளது.]

### காட்சி 1

(பாரியும் கபிலரும் உரையாடிக்கொண்டிருக்கின்றனர்)

**கபிலர்:** பறம்பு நாட்டு மன்னா! பல்லாண்டு வாழ்க. புலவர் போற்றும் புகழ் பெற்ற உமது ஆட்சியின் சிறப்பை உலகோர் அறிவர். பலவளமும் நிறைந்து இயற்கையின் உறைவிடமாக இருக்கும் இந்நாட்டின் சிறப்பைப் போற்றாதவர் உண்டோ?

**பாரி:** செந்தமிழ்த் தலைவரே! நீங்கள் உரைப்பது உண்மைதான். இந்நாடு எல்லோராலும் சிறப்பிக்கப் படுகின்றது. ஏன்? தங்களைப்போன்ற புலவர்கள் பாடும் புகழ்பெற்ற காரணத்தினால்தான். அருந்தமிழ் வாணர்கள் தாங்கள் கண்ட காட்சிகளை உள்ளத்தமைத்து இனிய கவிகளை இயற்றுவாரானால் அக்கவிகள் அல்லவா என்றைக்கும் இந்நாட்டின் புகழை மற்றவர்க்கு விளக்கும்!

**கபிலர்:** உண்மை, புவிச்சக்கரவர்த்திகளின் ஆட்சி மறையலாம்: நாடு இன்னொருவருடைய ஆட்சிக்கு உட்

படலாம். ஆனால் கவிச் சக்கரவர்த்திகளின் பாடல் என்றும் அழியாது. இன்னும் பல்லாயிரம் ஆண்டு களுக்குப் பிறகும் உம்மைப் பற்றியும் உமது நாட்டின் வளத்தைப் பற்றியும் மக்கள் சிறப்பித்துப் பேசுவர் என்றால் அதற்குக் காரணமான கவியின் பெருமையே பெருமையாகும்!

பாரி: புலவர் பெருமானே! ஆம். "மன்னனும் மாசறக் கற்றோனும் சீர் தூக்கில், மன்னனின் கற்றோன் சிறப்புடையோன்" என்பது பொய்யாகுமா? சென்ற இடம் எல்லாம் சிறப்புற்று வாழும் செந்தமிழ்க் கவிஞர் கள் வறுமையின்றி வளம்பெற்றுச் சிந்தை கலங்காது செம்மையாய் வாழவேண்டும். அவர்கள் நன்றாக வாழ்ந் தால்தான் நாட்டின் புகழ் நன்றாக வளரும்.

(இவ்வாறு கபிலரும் பாரியும் உரையாடிக் கொண்டிருக் கும்போது காவலன் ஒருவன் வருகிறான்.)

காவலன்: அரசே வணக்கம். தாங்கள் வேட் டைக்குச் செல்வதற்கு வேண்டிய பொன்தேர் வந்து விட்டது.

பாரி: நல்லது.

(காவலன் செல்கிறான்)

புலவர் பெருமானே! இப்பொழுது நான் வேட் டைக்குச் செல்கிறேன். இன்று மாலையே வந்து விடுவேன்.

**கபிலர் :** அவ்வாறே செல்லுங்கள். நான் சென்று வருகின்றேன். வணக்கம்.

(கபிலர் செல்கிருர். பாரியும் வேட்டைக்குப் புறப்படுகிருன்.)

## காட்சி 2

(பாரி வேட்டைக்குச் செல்லுதலும் முல்லைக்குத் தேர் அளித்தலும்)

[பாரி காட்டில் வேட்டையாடி விட்டுத் தன் பொன் தேரில் அமர்ந்து நாட்டிற்குத் திரும்பிவரும்போது வழியில் இருந்த ஓர் அழகிய சோலையினுட் சென்ருன். அச் சோலைக் காட்சிகளைக்கண்டு வருகின்றபொழுது முல்லைக் கொடி ஒன்று படர்வதற்குக் கொம்பில்லாமல் அசைந்து கொண்டிருந்ததைப் பார்த்தான். அவன் மனம் வருந்தி அதன் அருகில் சென்று,]

**பாரி :** அந்தோ ! இம்முல்லைக்கொடி படும் வேதனை என்ஞல் தாளமுடியவில்லை. இதற்கும் உயிருண்டு அல்லவா ? புல், பூண்டு முதலியவை ஓரறிவுயிர் என்று சொல்லியிருக்கின்ருர்கள் ! அது உண்மைதான். அவை பூத்துக் காய்த்துக் கனிகளை அளிக்கவில்லையா ? ஆறறிவு பெற்ற மக்கள் செய்கின்ற செயல்கள் அனைத்தையும் அவைகளும் செய்கின்றனவே. தம் குறைகளைப் பிறரிடம் கூறமுடியாத காரணத்திஞல் தாவரங்களை நாம் கவனியாதிருத்தல் நலமா ? ஆதரவற்ருேர்க்கு உதவுதல் அரசன் கடமையல்லவா ? சிற்றுயிர்க்கும் உற்றதுணை புரிதலே சிறந்த தருமம் ! இக்கொடியை இப்படியே விட்டுச் செல்லக்கூடாது. இதற்கு ஒரு கொழு

கொம்பை ஆதாரமாக அமைத்துவிட்டுத்தான் செல்ல வேண்டும்.

(ஒரு கொம்பைத் தேடிச் சுற்றுகிறான். ஒரு கொம்பும் கிடைக்கவில்லை.)

அடடா? ஒரு கொம்புகூட கிடைக்க வில்லையே! இப்பொழுது என்ன செய்வது? (சிறிது சிந்தித்து)

ஆம், நல்ல யோசனை! (என்று சொல்லிக்கொண்டு தனது தேருக் கருகில் சென்று குதிரையை அவிழ்த்து



பாரி முல்லைக் கொடிக்கு அருகில் தேரை நிறுத்தி மகிழ்தல்

விட்டுத் தேரை இழுத்துக் கொண்டுவந்து முல்லைக் கொடியின் அருகில் நிறுத்தி) இக்கொடி படர்வதற்குத் தகுதியாக இத்தேர் இருக்கின்றது.

(கொடியைத் தேரின்மீது படரும்படியாக விட்டு,)

முல்லைக்கொடியே! நீ நன்முகப் படர்ந்து உன் மணத்தை உலகெங்கும் வீசச்செய். இனிக் கவலையின்றி இன்ப மாக இரு.

(என்று சொல்லி மகிழ்ச்சியுடன் செல்கின்றான்.)

## காட்சி 3

(பாரியால் அவிழ்த்து விடப்பட்ட குதிரைகள் அவன் அரண்மனையை நோக்கிச் செல்கின்றன. அவற்றைக் கண்ட காவலர்)

**முதல் காவலன் :** (இரண்டாம் காவலனை நோக்கி) அண்ணு! என்ன இது! குதிரைகள் மாத்திரம் வருகின் றனவே! தேரையும் அரசரையும் காணுேமே.

**இரண்டாம் காவலன் :** தம்பி! இந்தக் குதிரைகள் நம் அரசர் சென்ற தேரில் கட்டப்பட்டவை அல்ல.

**முதல் காவலன் :** இல்லை அண்ணு! இந்தக் குதிரைகள்தான். நான்தான் அரசர் போகும்போது அருகிலிருந்து பார்த்தேனே.

**இரண்டாம் காவலன் :** அப்படியானல்...? உடனே சிலரைக் காட்டிற்கு அனுப்பு. அரசரும் தேரும் இருக்குமிடத்தை அறிந்துவரச் சொல்.

(இதற்குள் குதிரைகள் அருகில் வந்து விட்டன)

(முதல் காவலன் ஒரு மணியை அடிக்கின்முன். பத்துப்பேர் விரைந்து வருகின்றனர். அவர்களைக் காட்

டிற்கு அரசனைத் தேடி வருமாறு அனுப்புகின்றான். அவர்கள் விரைவாகச் செல்கின்றனர்.)

**இரண்டாம் காவலன் :** என்ன விந்தை! என்றைக்கும் இல்லாத நிகழ்ச்சியாக அல்லவா இருக்கிறது! அரசர் எங்கே?......

(சிந்தித்துக் கொண்டு இருக்கின்றான்)

## காட்சி 4

**கபிலர் :** (பாரி தேரை முல்லைக் கொடியருகில் நிறுத்திவிட்டுத் தன் கால்கள் சிவக்க அரண்மனைக்கு நடந்து வருவதைக் கண்டு ஆச்சரியத்துடன் பாரியை நோக்கி.)

வரையாது வழங்கும் வள்ளியோய்! உங்கள் தேர் எங்கே? நீங்கள் ஏன் நடந்து வருகின்றீர்கள்? செவ்விய பாதம் சிவக்க நீங்கள் நடந்து வருவது ஏன்! என்ன நடந்தது?

**பாரி :** புலவரேறே! ஒன்றுமில்லை. நான் வேட்டைக்குச் சென்று திரும்பி வருகையில் முல்லைக்கொடி ஒன்று கொழுகொம்பின்றித் தளர்ந்த நிலையில் இருந்தது. அது நன்றாகப் படர்வதற்காக என் தேரை அதன் அருகில் நிறுத்தி அக்கொடி நன்றாகப் படரும்படி விட்டு விட்டு நான் நடந்து வருகின்றேன். அவ்வளவுதான்.

**கபிலர் :** என்ன விந்தை! முல்லைக்கொடிக்குத் தேரீந்த வள்ளல்! ஓரறிவுயிரிடத்தும் இரக்கம்கொண்ட

உத்தமன்! தாவரங்களிடத்தும் தயாளகுணம் உடைய தண்ணளியோன்! ஆ ஆ! இதுவன்றோ கொடைப் பெருமை! இதுவன்றோ வள்ளல் தன்மை! அரசே! உமது புகழ் என்றும் குன்றாது ஓங்குக.

உள்ளே சென்று நடந்து வந்த களைப்பை நீக்கிக் கொள்ளுங்கள்.

(இருவரும் உள்ளே செல்கின்றனர்)

பாரி: புலவர் பெருமானே! நான் செய்த செயல் உங்களுக்கு வியப்பாக இருக்கிறதே! நான் என்ன செய்து விட்டேன்?

கபிலர்: 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்ற வாறு பிறர் செய்வதற்கு அரிய செயலைத்தான் செய்திருக் கின்றீர்கள். உங்கள் முந்நூறு ஊர்களையும் இரவலர்க்கு அளித்ததுகூட எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்க வில்லை. ஆனால், முல்லைக்கொடிக்குத் தாம் ஏறிச்சென்ற பொன்தேரைக் கொடுத்த செயல் எளிய செயல் அன்று. இத்தகைய தண்ணளி உடைய தங்களை மன்னனாகப் பெற்ற இந்நாட்டு மக்கள் செய்த நல்வினைப் பயன் செப்பும் தரமன்று. உலகைக் காப்பாற்றுவது மாரி மாரி என்று புலவர்களும் மற்றவர்களும் புகல்கின்றனர். ஆனால் பாரி என்னும் வள்ளலாகிய நீங்கள் இருப்பதை அவர்கள் மறந்தார்கள் போலும். உமது புகழ் வாழ்க. நீங்கள் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். நான் பிறகு வருகின்றேன். வாழ்க!

[கபிலர் செல்கிறார்]

## அருஞ்சொற் பொருள்

ஈந்த—கொடுத்த, உறைவிடம்—இருப்பிடம், மாசு அற—குற்றம் நீங்க, தூக்கில்—ஆராய்ந்து பார்த்தால், கொழு கொம்பு—பற்றுக்கோடு, இரவலர்—யாசிப்பவர், தண்ணளி—கருணை, மாரி—மழை, குன்ருது—குறையாமல்.

## வினுக்கள்

1. பாரி அரசாண்ட நாட்டின் பெயர் என்ன ?

2. தன் நாட்டின் புகழ் எங்கும் பரவியிருப்பதற்குக் காரணம் என்ன என்று பாரி கூறினுன்? அது எப்படிப் பொருந்தும்?

3. முல்லைக் கொடி படர்வதற்குக் கொம்பில்லாமல் அசைந்து கொண்டிருந்ததைப் பார்த்த பாரி கூறியவற்றை எழுது.

4. பாரியைக் கபிலர் எவ்வாறு போற்றினுர் ?

5. பாரியின் கொடைச் சிறப்பை எழுது.

6. பாரி ஓரறிவுயிரிடத்தும் இரக்கம் உடையவன் என்பதை விளக்கு.

7. ‘உலகைக் காப்பது எது’ என்பதைப்பற்றி புலவர்கள் கூறியது என்ன ?

## பயிற்சிகள்

1. பிரித்து எழுது :—

பல்லாண்டு, மாசற, ஓரறிவுயிர்.

2. சேர்த்து எழுது :—

ஆறு + அறிவு ; சோலை + காட்சி ; கொம்பு + இன்றி ; குன்றுது + ஓங்குக.

3. வாக்கியத்தில் அமைத்து எழுது :—

படர்வதற்கு, மாசற, உறைவிடம், உட்படலாம்.

4. பின்வரும் பன்மைகளை ஒருமைகளாக மாற்றி எழுது :—

வந்து விட்டன, செல்கின்றனர், வருகின்றீர்கள், புகல்கின்றனர்.

# 12. கடிதம்

தஞ்சை
7-10-1950

அன்பு நலம் கனிந்த கண்ணட்பனுக்கு,

நலம். நலம் பெற்றுய்க. நீ இவ்வாண்டு மூன்ரும் படிவத்தில் நன்ருகப் படித்து, நல்லறிவு வாய்ந்து நற்குண நல்லொழுக்கங்களிற் சிறந்து, நல்லவன் என்று நாட்டினர் போற்ற, நல்வாழ்வு வாழ்வதற்கேற்ற சில நல்வழிகளை இக்கடிதத்தில் உனக்குத் தெரிவிக்க விரும்பு கின்றேன்.

"கற்கக் கசடறக் கற்பவை ; கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்றவாறு கற்க வேண்டியவற்றைப் பிழையறக் கற்று, கற்றவாறு நடந்து, உன் கல்விக்கும் வாழ்க் கைக்கும் ஏற்றவகையில் நீ வாழவேண்டும். இவ்வுலகில் மக்களாய்ப் பிறந்தோர் அடையும் பேறுகள் பல. அவற்றை மக்கள் முயற்சியினுலும், முதிர்ந்த அறிவினு லுமே பெறுகின்றனர். ஆகையினுல் நீயும் முயற்சி யுடன் முன்னேறு. ஒருநாளும் வீண் பொழுது போக்காதே. "கல்வி கரையில ; கற்பவர் நாள் சில" என்னும் உண்மையை உணர்ந்து பல நூல்களையும் நன்ருகப்படி. "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு." ஆதலின் படிக்கப்படிக்க அறிவு வளரும். அறிவு பெருகப் பெருக நீயும் ஓர் அறிஞனுவாய். நீ அறிஞனுனல், கண்

இருந்தும் குருடர்களாய், காதிருந்தும் செவிடர்களாய், வாய் இருந்தும் ஊமையராய் வாழ்கின்ற மக்களை அறியாமைப் படுகுழியிலிருந்து காப்பாற்ற முடியும். நம் நாட்டு மக்களிடம் காணப்படும் வேற்றுமைகளை விலக்கி ஒற்றுமையை உண்டாக்கி "எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓரினம், எல்லோரும் இந்நாட்டு மக்கள்" என்னும் பரந்த நோக்குடன் வாழுமாறு செய்ய முடியும். அது மட்டுமா ?நம் நாட்டு மக்களின் பண்டைச் சிறப்புகளை நினைவூட்டி, பழம் பெருமைகளை எடுத்துக்காட்டி மீண்டும் அவ்வாறு வாழச் செய்யலாம். அன்றியும் கைத்தொழில், வாணிபம், உழவு முதலானவற்றில் மக்களை உற்சாகத்துடனும் ஊக்கத்துடனும் ஈடுபடச் செய்து இந்நாட்டைப் பொன்னுடாக மாற்றலாம். ஆம். முயன்றுல் முடியாததுண்டோ? உன்னைப்போன்ற இளைஞர்கள் ஒன்று கூடினுல் இந்நாட்டை—ஏன்? இவ்வுலகையே இன்பம் நிறைந்த இடமாக மாற்றமுடியாதா? முடியும். ஆனுல் அறிவும் ஆண்மையும், கடமையுணர்ச்சியும், கட்டுப்பாடும் வேண்டும். அவையின்றேல் எதையும் வெற்றியுடன் செய்ய இயலாது. இப்பொழுது பள்ளிக்கூடங்களில் குடிமைப் பயிற்சி என்னும் ஒரு பயிற்சியைக் கொடுப்பதின் நோக்கமென்ன? இளைஞர்கள் இளமையிலிருந்தே ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு, தலைவருக்கு அடங்கி நடக்கும் தன்மையைப் பெற்று, எடுத்த காரியத்தை இனிதாக முடிக்கும் ஆற்றலைப் பெற்றுத் தங்களுக்கும் நாட்டுக்கும் என்றும் அழியாப் புகழைத் தேடும் பொருட்டன்றே ? குடிமைப் பயிற்சியின் உண்மையை உனது ஆசிரியர் விளக்கிச் சொல்வார். அதை உணர்ந்து அதன்படி நடந்துகொள்.

மேலும், பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, ஐம்பெருங் காப்பியம் முதலானவற்றை நீ படிக்கவேண்டும். ஏனென்றால், அப்பொழுதுதான் நம்முன்னோர்களின் பெருமையை அறிய முடியும். மேலே குறிப்பிடப் பெற்ற ஒவ்வொன்றும் பல நூல்களின் தொகுதியாகும். அவற்றுள் ஒவ்வொரு தொகையிலும் உள்ள நூல்களின் பெயரைக் குறிப்பிடுகின்றேன். அவற்றை நினைவில் வைத்துகொள்.

எட்டுத்தொகை: நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் எட்டு நூல்களாகும்.

பத்துப் பாட்டு: திருமுருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்துப் பாடல்களாகும்.

ஐம்பெருங் காப்பியம்: சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்து நூல்களாகும். இவற்றுள் வளையாபதி, குண்டலகேசி இவ்விரண்டும் முழுவதும் இப்பொழுது இல்லை. இவ்வாறே ஐஞ்சிறு காப்பியங்கள் என்றும் உண்டு. அவற்றுள் சூளாமணி தவிர மற்றவை முழுவதும் இல்லை. இவையன்றித் தொல்காப்பியம், யாப்பருங்கலம் முதலான இலக்கண நூல்களும், நாலடி, திருக்குறள் முதலான நீதி நூல்களும் இருக்கின்றன. இந்நூல்கள் அனைத்தையும் ஒவ்வொரு தமிழ் மாணவரும்

அவசியம் கற்கவேண்டும். ஆனால் இந்நூல்களை இப்பொழுதே படிக்க முடியாது. இவற்றின் பெயர்களை நினைவில் வைத்துக்கொண்டு சில ஆண்டுகள் சென்ற பிறகாவது நீ படிக்க வேண்டும்.

இடைக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களான பெரிய புராணம், கம்பராமாயணம் முதலியவற்றையும் தற்காலக் கவிஞர்களான பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை, பாரதிதாசன் முதலான பெருமக்களின் கவிகளையும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் எழுதிய மனோன்மணீயம் என்னும் நாடக நூலையும் படி. இங்கு இன்னும் நான் எழுதுவதற்கு இடமில்லாது விட்ட கவிஞர் பலருடைய நூல்களையும் படித்துப்பார். உன் பள்ளிக்கூடத்திலுள்ள நூல் நிலயத்திற்குச் சென்று அங்குள்ள தமிழ்ப் புத்தகப் பட்டியலை எடுத்துப் பார். கற்கவேண்டியவை எவ்வளவோ இருக்கின்றன என்பது தெரியும். தமிழில் உள்ள நூல்களையே நாம் நம் வாழ்நாளுக்குள் படிக்க முடியாதென்றால், படிக்கவேண்டிய நூல்களின் அளவின் பெருமையும் நாம் கற்பதின் அளவின் சிறுமையும் நமக்கு நன்றாகத் தெரியும். இது போலவே, ஆங்கிலத்திலே ஷேக்ஸ்பியர், கோல்ட்ஸ்மித், மில்டன், ஷெல்லி, வார்ட்ஸ்வொர்த், பெர்னாட்ஷா முதலான அறிஞர் பெருமக்களின் அரிய நூல்களைப் படி. நம் தமிழ் நூல்களையும், ஆங்கில நூல்களையும் ஒப்பிட்டுப் படி. மற்றும் உள்ள பல நூல்களையும் படி. படிப்பதனால் ஒருவன் அடையும் இன்பம் பல. "பிறநாட்டு நல்லறிஞர்

சரித்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும்; இறவாத புகழுடைய புது நூல்கள் தமிழ் மொழியில் இயற்றவேண்டும்" என்பதை மறவாதே.

இங்ஙனம், மேலே சொல்லப்பட்ட தமிழ் இலக்கியங்களை நீ படிப்பதனுல் நம் தமிழ் மக்களின் வீரம், கொடை, புலமை, புகழ், அறிவு, ஆற்றல், ஆட்சிச் சிறப்பு முதலியவற்றை அறியலாம். அறிந்து மீண்டும் அவற்றைப் பெற்று அவனிபோற்ற வாழலாம். ஆனுல் எந்நூலைப் படித்தாலும் படித்தவற்றைச் சிந்திக்க வேண்டும்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு." ஆதலின் உண்மையை யுணர்ந்து கொள்ளவேண்டும். அதுதான் கல்விக்கு அழகாகும்.

நான் இக்கடிதத்தில் உனக்கு எழுதியுள்ளவாறு நீ பல நூல்களையும் படித்துப் பேரறிஞனுக விளங்குவா யானுல் அதுவே எனக்குப் பெருமகிழ்ச்சியை விளைப்ப தாகும். உன் வகுப்பில் உன்னுடன் பயிலும் மாணவர் களையும் மேலே சொல்லியுள்ள நூல்களைப் படிக்கும் படிச் செய். நீ இவ்வாண்டு நன்ருகப் படித்து மேல் வகுப்பிற்குச் சென்று மேன்மேலும் நன்ருகக் கற்று ஒரு கவிஞனுக - அறிஞனுக - நாட்டுக்கு நலம் செய்பவனுக விளங்குவாயாக! பல அறிஞர்களின் வாழ்க்கை வர லாறுகளைப் படிக்கும் நீ அவர்களைப் போல் வாழ விரும்புவாய் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.

ஆயினும் எரியும் விளக்குக்கும் தூண்டுகோல் தேவை என்றபடி, உன் அறிவாகிய விளக்கிற்கு இக் கடிதம் ஒரு தூண்டுகோலாக இருக்கும் என்பது என் நம்பிக்கை. உன் அறிவு ஒளியாமல் இந்நாட்டில் உள்ள அறியாமை யாகிய இருள் அகன்று, மக்கள் நல்வழியில் செல்லுமாறு செய்வதற்கு இச்சிறு கடிதம் பயன்படும் என்ற நம்பிக்கையுடன் இதை முடிக்கின்றேன். முயற்சி செய். முன்னேற்றம் காண்பாய்.

இங்ஙனம்,
உன் நலம் கருதும் தந்தை,
**முத்தையன்.**

**மு. கண்ணப்பன்,**
மூன்றும் படிவம், சி. பிரிவு,
தொண்டை மண்டலம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை - 1.

## அருஞ்சொற் பொருள்

கசடு அற—குற்றம் நீங்க, பேறு—சிறப்பு, கரையில—எல்லை (அளவு) இல்லை, தொட்டனைத்து—தோண்டிய அளவிற்கு, கேணி—கிணறு, இறவாத—அழியாத, அவனி—பூமி, பயிலும்—படிக்கின்ற, ஐயம்—சந்தேகம்.

## வினாக்கள்

1. "கல்வி கரையில; கற்பவர் நாள் சில" என்பது எவ்வாறு பொருந்தும்?

2. 'தொட்டனைத்தூறும்' என்னும் குறளின் கருத்தை எழுது.

3. பள்ளிக்கூடங்களில் குடிமைப் பயிற்சி போதிக்கப்படுவதின் நோக்கமென்ன?

4. பழந்தமிழ் நூல்களின் தொகுதிகளின் பெயர்களை எழுது.

5. எட்டுத் தொகை, ஐம்பெருங் காப்பியம்-எவை?

6. பத்துப் பாட்டு என்னும் தொகையில் உள்ள நூல்களில் நான்கின் பெயரெழுது.

7. இடைக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் எவை?

8. தற்காலக் கவிஞர் பெருமக்கள் யாவர்?

9. மேனாட்டுக் கவிஞர்கள் சிலர் பெயரைக் குறிப்பிடுக.

10. தமிழ் இலக்கியங்கள் பலவற்றையும் படிப்பதன் பயன் என்ன?

## கட்டுரைப் பயிற்சி

1. நண்பன் ஒருவனுக்கு 'இலக்கியப் பெருமை' அல்லது 'நான் விரும்பும் ஒரு தமிழ் இலக்கியம்' என்பதைப் பற்றி ஒரு கடிதம் எழுது.

## மொழிப் பயிற்சி

1. கற்றான், குறிப்பிடுகிறேன், போற்ற, அகன்று—இவற்றிற்குப் பகுதி மாத்திரம் எழுது.

2. அகல், பயில், சிந்தி—இப்பகுதிகளின் மூலமாக உண்டாகக்கூடிய பெயரெச்ச, வினையெச்சங்களை எழுது.

3. இளைஞர்கள் ஒன்று கூடினல் இந்நாட்டை ஏன் இவ்வுலகையே இன்பம் நிறைந்த இடமாக மாற்றமுடியாதா முடியும் ஆனல் அறிவும் ஆண்மையும் கடமை யுணர்ச்சியும் கட்டுப்பாடும் வேண்டும் அவையின்றேல் எதையும் வெற்றியுடன் செய்ய இயலாது—இவ்வாக்கியத்தில் எங்கெங்கு நிறுத்துக் குறிகள் இருக்க வேண்டுமோ அவற்றை அமைத்து எழுது.

---

# 13. ஜார்ஜ் பெர்னட்ஷா

மக்களுக்கு நல்லறிவு புகட்டும் பெரியார்கள் எந்த நாட்டில் பிறந்தாலும், எந்த மொழி பேசுகின்றவரா



ஜார்ஜ் பெர்னட்ஷா

யினும் அவர்களுக்குத் தனிமதிப்பு உண்டு. "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள்

காண்பது அறிவு " என்னும் திருக்குறளின் கருத்துப்படி எதையும் சிந்தித்து, ஆராய்ந்து, விருப்பு வெறுப்பு இன்றி உள்ளத்தே தோன்றும் கருத்துக்களை உள்ளவாறு எடுத்துரைத்து, மக்களுடைய உள்ளத்தைத் தூய்மைப் படுத்தும் மாண்புடையோரே, நல்லறிவாளர் என்று நாட்டு மக்களால் போற்றப்படுவார்கள். அத்தகைய பெருமக்களில் நமது காந்தியடிகளும் ஒருவராக விளங்கினுர் என்பதை முன்னமே படித்தீர்கள். காந்தி அடிகள் கொலை செய்யப்பட்டபோது அதைக் கேள்வியுற்று "உலகில் அளவுக்கு மீறி நல்லவர்களாக இருப்பதும் ஆபத்து என்பதை இந்நிகழ்ச்சி காட்டுகிறது" என்று கூறி, அதன் மூலம் தம்முடைய வருத்தத்தை இந்திய நாட்டினருக்குத் தெரிவித்துக் கொண்டதோடு, என்றும் இந்தியரின் இணையற்ற நண்பராக இருந்து வந்த பெரியார் ஜார்ஜ் பெர்னுட்ஷா ஆவர். அவரைப்பற்றி நாம் அறிந்து கொள்வது அவசியமாகும்.

அயர்லாந்து தேசத்தின் தலைநகரம் டப்ளின் என்பது. அங்கு ஜார்ஜ் கார்ஷா என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் இசைக் கலையில் பற்றுடையவர். அரசாங்க உத்தியோகத்தில் இருந்தார். ஆனுல் அவர் தமது வாழ்க்கையைத் திறம்பட நடத்தாது குடி முதலிய தீய பழக்கங்களைக் கொண்டிருந்தார். அவருடைய குமாரரே அறிஞர் பெர்னுட்ஷா. ஷாவுக்கு இரண்டு சகோதரிகளும் இருந்தார்கள். தந்தையின் பொறுப்பற்ற வாழ்க்கை முறையும் தாயாரின் சாந்தகுணமும் ஷாவையும், அவர் சகோதரிகளையும் உயர்ந்த முறையிலே வளர்ப்பதற்கு முடியவில்லை. தந்தையைப் பெருங்குடி

யினர் என்ற காரணத்தால் உறவினரும் மற்றவரும் வெறுத்தனர். குடியனுடைய மனைவி என்ற காரணத்தால் ஷாவின் தாயாரையும் உறவினர் வெறுத்தனர். ஷா இளமையில் படிக்க முடியாதபடி குடும்ப நிலை இருந்தது. ஷாவின் தாயாருக்கு இசைப்பயிற்சி இருந்தது. அப்பயிற்சியைக் கொண்டு தாயார் ஓரளவு பொருள் தேடிக் குடும்பத்தை நடத்தி வரலானார். ஷாவும் இளமையிலேயே இசைக்கலையை நன்ருகப் பயிலலானார். அவருடைய குடும்பமே இசையில் இணையற்ற குடும்பமாக இலங்கியது.

சில ஆண்டுகளில் ஷாவின் தந்தையாரை, அவர் பார்த்து வந்த வேலையிலிருந்து அரசாங்கத்தார் விலக்கி விட்டார்கள். அப்பொழுது அரசாங்கத்தார் கொடுத்த 'பென்ஷன்' தொகையைக் கொண்டு வேறு ஒருவருடன் சேர்ந்து கூட்டு வியாபாரம் செய்தார். இவ்வாறு துன்பத்தின்மேல் துன்பப்பட்டு வந்த குடும்பத்திலே பிறந்தும், ஷா, ஒரு சிறிதும் கவலைப்பட்டதில்லை. "இடுக்கண் வருங்கால் நகுக" என்னும் உண்மையை உணர்ந்து அவர் வாழ்ந்து வந்தார். முறையாகப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து உயர்தரப் படிப்பைப்பெற ஷாவுக்கு முடியாத போதிலும், அவர் கூர்த்த மதியினராதலின் எப்பொழுதும் ஆங்கில நூல்கள் பலவற்றைப் படித்துக்கொண்டே இருப்பார். **ஷெல்லி** முதலான அறிஞர்களின் கவிகளைக் கற்பதிலே அவருக்குப் பேரார்வம் உண்டு. அதனுல் அவர் பிற்காலத்தில் பேரறிஞராய் விளங்க முடிந்தது. இசையிலும், ஓவியத்திலும் பயிற்சி மிகுதியாகப் பெற்றிருந்தார். தம்முடைய தாயாரின்

உருவத்தைத் தாமே ஓவியமாக தீட்டி வைத்துள்ளார். இங்ஙனம் கல்வித் துறையிலும், கலைத்துறையிலும் ஷா சிறப்புப் பெற்று வரும்பொழுது ஒரு ஜமீன்தாரிடத்தில் கணக்கர் வேலையில் அமர்ந்தார். செய்வன திருந்தச் செய்யும் ஆற்றல் பெற்ற ஷா மாதம் பதினெட்டு ஷில்லிங் சம்பளத்திலிருந்து நான்கு பவுன் சம்பளமாகும் வரை உயர்வு பெற்ருர். ஆயினும் அத்தொழில் அவருக்குப் பிடிக்காத காரணத்தால் அவ்வேலையை விட்டு விலகி இலண்டனுக்குப் போய்ச் சேர்ந்தார்.

இலண்டனில் இருந்தபோது இரண்டு ஆண்டுகள் ஒரு தொழிலும் இல்லாமல் இருந்து வந்தார். ஆனுலும் ஏதேனும் எழுதிக்கொண்டே இருந்தார். தினமும் குறிப்பிட்ட அளவு எழுதுவது என்னும் பழக்கம் உடையவராக இருந்தார். இவ்வாறு ஒழுங்காக அவர் எழுதிக் கொண்டு வந்த காரணத்தால் ஆண்டுக்கு ஒரு நாவல் வீதம் ஐந்து நாவல்களை ஐந்து ஆண்டுகளில் எழுதி முடித்தார். இசைப்பயிற்சியின் துணையைக் கொண்டு தாயார் பெற்றுவரும் பொருளில் தாமும் தமது சகோதரிகளும் வாழ்ந்து வந்த நிலையில் வாழ்க்கை எப்படி வளம் பெற்றதாக இருக்க முடியும்? ஆயினும் அவர் வீண்பொழுது போக்காமல் நாவல் எழுதிக் கொண்டு வந்த காரணத்தால் அவருடைய உழைப்பும், உழைப்பின் திறமையும், அறிவின் ஆற்றலும் சிறந்தன என்பது தெரிகிறது அல்லவா? அவர் முதன் முதலாக தமது எழுத்தின் மூலமாக 1885-ஆம் ஆண்டிலே 112 பவுன் வருமானம் பெற்ருர். அன்றுமுதல் அவரிடமிருந்து வறுமை விடைபெற்றுக் கொண்டு சென்று விட்டது.

பிறகு நாவலின் மூலமாகத் தம்முடைய கடமையை மக்களுக்கு நன்ருகச் செய்யமுடியாது என்று எண்ணிய ஷா நாடகம் எழுதுவதில் ஈடுபட்டார். "மனைவி இழந்தவர்களுடைய வீடுகள்", "மனிதனும் உயர்நிலை மனிதனும்", "கான்திடா" முதலிய நாடகங்களை ஒன்றன்பின் ஒன்ருக எழுதினர். இந் நாடகங்கள் நாடகமேடைகளில் நடித்துப் புகழ்பெறத் தொடங்கிய பிறகே ஷாவின் புகழ் பரவத் தொடங்கியது. பின்னர் ஷாவுக்கு எங்கும் வரவேற்பும், வாழ்த்தும் கிடைத்தன. அறிஞர் ஷா மக்கள் தம்மை வாழ்த்துவதையும் வரவேற்பதையும் கண்டு தம் நிலையைத் தாம் மறந்துவிடவில்லை. "மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும். அதற்கு மக்கள் தங்களைத் தாங்களே திருத்திக் கொள்ள வேண்டும். உழைப்பே உயர்வு தரும். அதற்கு ஏற்றுற்போல் வாழ்க்கையை வளம்படுத்திக் கொள்ளவேண்டும்" என்று அறிவுறுத்தி வந்தார்.

ஷா, தமது மனம் விரும்பிய ஒரு பெண்ணை மணந்து இல்லற வாழ்க்கையில் இனிதே வாழ்ந்து வந்தார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் பழக்கம் ஷாவுக்கு இல்லை. விலங்குகளைத் துன்புறுத்தும் கருணையற்ற செயலை அவர் வெறுத்தார். மாமிச உணவை அவர் உண்டதில்லை. மரக்கறி உணவே அவருக்கு ஏற்ற உணவாகும். பிச்சைக்காரர்களுக்கு உதவி செய்வதை ஷா வெறுத்தார். சமயத்துறையில் அவர் போக்கு தனிமையானது.

இப்பெரியார் எவரிடமும் வேடிக்கையாகப் பேசுவதில் விருப்பம் உள்ளவர். சிலரைத் தாழ்த்திப் பேசும்

போதுகூட வேடிக்கையாகப் பேசுவார். அவருடைய பேச்சு நகைச்சுவை மலிந்து காணப்படும். பெண்கள் முன்னேற்றத்தில் ஷா பெரிதும் தீவிரமாக பங்கெடுத்துக் கொண்டார். பெண்கள் முன்னேற்றம் நாட்டின் முன்னேற்றமாகும் என்பது அவர் கருத்து. பயனற்ற பழமைகளை விலக்கிக் காலத்திற்கும் கருத்திற்கும் இசைந்தவாறு மக்கள் தங்கள் வாழ்வு முறைகளை மாற்றிக்கொள்ள வேண்டும். கெட்டுப்போன பொருள்களை எடுத்தெறிந்து விட்டாலொழிய மற்றப் பொருள்களை நன்ருகக் காப்பாற்ற முடியாததுபோல பழமையானவற்றுள் அறிவுக்கு ஒவ்வாதவற்றை நீக்கிஞலன்றி நல்ல திட்டங்கள் நாட்டிலே நிலைக்க முடியா என்பது ஷாவின் கருத்து.

இங்ஙனம் ஷா புதிய கருத்துக்கள் பலவற்றைப் புகன்று, ஐம்பதுக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதி, உலக மக்கள் அனைவராலும் போற்றப்பட்டு, உத்தமராக வாழ்ந்தார். அவருடைய வாழ்க்கையில் சிறப்பாக அமைந்திருந்தது ஒழுக்கம் என்பது. நல்லொழுக்கத்தால் நல்லுடல் பெறலாம் அல்லவா ? தொண்ணூறு வயதான பிறகும் வைகறைத் துயிலெழுதல் முதல், இரவு படுக்கைக்குச் செல்லுதல் வரை குறித்த காலத்தில் குறித்த வேலையைச் செய்து ஒழுங்கு முறையைக் கடைப்பிடித்து வந்தார். நல்லவுடல், நல்ல அறிவு, நன்னம்பிக்கை அனைத்தும் உடையவராய் வாழ்ந்தார். இப்பெரியார் 1950-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இரண்டாம் நாள் தமது தொண்ணூற்ருருவது வயதில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

அவருடைய அறிவுரைகள் நம் நாட்டு இளைஞர்களுக்கு ஏற்ற நல்லுறைகளாகும். அவரிடத்திலே காணப்பட்ட ஒழுக்கம், அடக்கம், ஆடம்பரமில்லாமை, உண்மை பேசுதல் முதலிய நற்குணங்களைப் பெற்று ஒவ்வொருவரும் வாழ முயல்வதே அவரைப்பற்றிப் படிப்பதனுடைய பயனாகும்.

## அருஞ்சொற் பொருள்

இலங்கியது - விளங்கியது, நகுதல் - சிரித்தல், இடுக்கண் - துன்பம், கூர்த்தமதி - நுட்பமான புத்தி, நகை - சிரிப்பு, மலிந்து - நிறைந்து, புகன்று - சொல்லி, வைகறை - விடியற்காலை.

## வினாக்கள்

1. நாட்டு மக்களால் நல்லறிஞர் என்று போற்றப்படுவர் யாவர்?

2. ஷாவின் ஊர், தந்தை பெயர்களை எழுது.

3. ஷாவின் இளமைப் பருவ வாழ்வைப்பற்றி எழுது.

4. ஷாவினிடம் காணப்பட்ட நற்குணங்களை வரைக.

5. ஷா மக்களுக்குக் கூறிய நல்லுரைகள் சிலவற்றை எழுது.

6. பெர்னட்ஷா அவர்கள் ஒழுங்கான வாழ்க்கை உடையவர் என்பதை ஆதாரங்களுடன் விளக்கு.

7. ஷா எழுதிய நாடக நூல்கள் இரண்டைக் குறிப்பிடு.

8. ஷா தம் வாழ்வில் கடைப்பிடித்த நல்லொழுக்க முறைகளை எழுது.

9. ஷாவின் வரலாற்றைப் படிக்கும் மாணவர்கள் மேற் கொள்ளவேண்டிய திட்டங்கள் எவை?

## பயிற்சிகள்

1. பின்வரும் சொற்களில் பெயரெச்ச வினையெச்சங் களைத் தெரிவி.

விளக்கி, கண்டு, பிறந்த, பெற்று, கொண்ட.

2. உழைத்தார், தூண்டினர்—இவ்வினை முற்றுச் சொற் களைப் பெயரெச்ச வினையெச்சங்களாக மாற்று.

3. ஆற்றினர், கொண்டு, இயற்றினர்—உறுப்பிலக்கணம் எழுது.



# 14. உரையாடல்

(பள்ளிக்கூடம், தசரா விடுமுறை முடிந்து திறக்கப்பட்டவுடன் கண்ணன், குமரன் என்னும் இரண்டு நண்பர்களும் சந்தித்து விடுமுறையின் போது தாங்கள் சென்றிருந்த இடங்களையும், கண்ட காட்சிகளையும் பற்றி உரையாடிக்கொண்ட பகுதி பின்வருவது.)

**கண்ணன் :** குமரா! இவ்விடுமுறையின் போது நீ எங்கே சென்றிருந்தாய்? நீ சென்ற இடத்தில் கண்ட காட்சிகள் எவை?

**குமரன் :** நான் இவ்விடுமுறையின் போது 'சாந்தபுரி' என்னும் கிராமத்திற்குச் சென்றிருந்தேன். அவ்வூர் நான் பிறந்து வளர்ந்த ஊர். அது இயற்கைக் காட்சிகள் பலவும் நிறைந்த ஊர். பாலாற்றின் கரையில் அவ்வூர் இருக்கிறது. அங்கு நான் புதியதாகப் பார்ப்பதற்குரிய காட்சி ஒன்றும் எனக்கு இல்லை. ஆயினும் ஒரு புதுமையைக் கண்டேன். அதனால் அளவில்லா ஆனந்தம் கொண்டேன்.

**கண்ணன் :** என்ன புதுமை அது?

**குமரன் :** எங்களூரில் இப்பொழுது கூட்டுறவுப் பண்ணை முறையை ஏற்படுத்தி எல்லோரும் ஒற்றுமையாக வாழ்ந்து விவசாயத்தை வளர்த்து நாட்டுக்குச் சேவை செய்யும் நல்ல முறையைக் கையாண்டு வரு

கின்றனர். இதற்குமுன் நான் எங்களூருக்குச் சென்றால் ஒருவரோடு ஒருவர் பொறாமையுடன் சண்டையிட்டு, வீண் பொழுது போக்கிக்கொண்டு வீணர்களாக இருப்பதைத்தான் காண்பேன். ஆனால் இம்முறை சென்ற போது அத்தகைய நிலையில் அவர்கள் இல்லை. எல்லோரும் உற்சாகத்துடனும் ஒற்றுமையுடனும் வாழ்கின்றனர். ஒருவருக்கொருவர் உள்ளம் கலந்து உரையாடுகின்றனர். உண்மையிலேயே அவர்களைப் பார்க்க எனக்கு மகிழ்ச்சியாகவே இருந்தது.

**கண்ணன் :**—கூட்டுறவுப்பண்ணை என்றால் என்ன, குமரா ?

**குமரன் :** கிராமங்களில் வாழ்வோர் அனைவர்க்கும் சிறுசிறு நிலங்கள் பல இடங்களில் துண்டு துண்டாக இருக்கும். ஒருவருக்கு நான்கு ஏக்கர் நிலம் இருப்பதாக வைத்துக்கொள். அந்நான்கு ஏக்கர் நிலமும் ஒரே இடத்தில் இராது. இங்கு அரை ஏக்கர் ; அங்கே கால் ஏக்கர் ; வேறொரு இடத்தில் அரை ஏக்கர் என்று இவ்வாறு ஏழு அல்லது எட்டு இடங்களில் இருக்கும். இவ்வாறு இருப்பதனால் அவரால் நன்றாகப் பயிரிட முடியாது. கிணறு வெட்டித் தண்ணீர் பாய்ச்சலாம் என்றால் எத்தனை இடங்களில் கிணறு தோண்ட முடியும் ? அதனால் கஷ்டமாகவே இருக்கும். இவ்வாறே ஒவ்வொருவர்க்கும் கஷ்டம் உண்டு. நம் நாட்டில் விவசாயம் மற்ற நாடுகளைப்போல முன்னேற்றம் அடையாமல் இருப்பதற்குரிய பல காரணங்களில் முக்கியகாரணம் இதுபோல அங்கங்கே சிறுசிறு துண்டுகளான நிலங்களை விவசாயிகள் வைத்துக் கொண்டிருப்பதே என்று பல

பெரியோர்கள் கூறியுள்ளனர். அதனால் அக்குறையை நீக்கி எல்லோரும் ஒன்று சேர்ந்து என் நிலம் உன் நிலம் என்ற வேறுபாடின்றி, விவசாய முன்னேற்றத்திற்காகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ள கருவிகளைப் பயன் படுத்திப் பயிரிட்டுக் கடைசியில் தத்தமக்கு உரிய அளவின்படி, கிடைக்கின்ற வருமானத்தைப் பங்கிட்டுக் கொள்ளும் முறையைத்தான் கூட்டுறவுப் பண்ணை முறை என்று சொல்கின்றார்கள்.

**கண்ணன் :** சரி. இக்கூட்டுறவுப் பண்ணை முறையால் உண்டாகும் நன்மைகளை எனக்கு நன்றாக விளக்கிச் சொல்.

**குமரன் :** இப்பொழுது எங்கள் ஊரில் கண்டவற்றைச் சொல்லுகின்றேன். அதிலிருந்து இத்திட்டம்



டிராக்டர் மூலம் நிலத்தை உழுதல்

எவ்வளவு நன்மை பயக்கக் கூடியதென்பதை அறிந்து கொள். முன்பு சிறுசிறு துண்டுகளாக இருந்த நிலங்கள்

இப்பொழுது பெரும் பரப்பு நிலமாக மாற்றப்பட்டுள்ளன. சிறு சிறு நிலங்களாக இருந்தால் அந்நிலத்தைப் புதிய முறையில் விவசாய முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்தப்படும் “டிராக்டர்” முதலிய கருவிகளைப் பயன்படுத்த முடியாது. ஆனால் இப்பொழுது இந்த டிராக்டர் மூலமே நிலத்தை உழுகின்றார்கள். நிலத்திற்கு வேண்டிய எரு முதலியவற்றை நிறைய வாங்கிப் போடுகின்றார்கள். முன்பு அவற்றைப் பணம் உள்ளவர்களே வாங்குவர். ஏழைகளால் வாங்கமுடியாது. இப்பொழுது எல்லோருடைய நிலங்களுக்கும் நல்ல உரம் கிடைக்கிறது. நீர் இறைக்கும் நான்கு பெரிய இயந்திரங்களை வாங்கி, நான்கு பக்கங்களிலும் பெரிய கிணறுகள் வெட்டி அவற்றின் அருகில் அமைத்துத் தண்ணீர் பாய்ச்சுகின்றனர். அவ்வூரிலுள்ள விவசாயிகள் அனைவரும் சேர்ந்து உழைக்கின்றனர் ; களையெடுக்கின்றனர் ; காப்பாற்றுகின்றனர். இம்முறைப்படிதான் நூற்றுக்கணக்கான ஏக்கர் பரப்புள்ள நிலங்களை இயந்திரங்களின் மூலமாகவே மேனாடுகளில் பயிரிட்டு வருகின்றனர்.

**கண்ணன் :** இயந்திரங்கள் வாங்குதல், கிணறு வெட்டுதல், எருவாங்குதல் முதலிய செலவிற்குப் பணம் எப்படிக் கிடைக்கிறது ?

**குமரன் :** ஊரிலுள்ள நில உரிமையாளர் ஒவ்வொருவரும் தங்கள் நில அளவிற்குத் தகுந்தாற்போல முதற்பணம் (Share) கட்டுகின்றார்கள். அரசாங்கம் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் வேண்டிய அளவு பணம் கொடுத்து உதவி செய்கிறது. மேலும் டிராக்டர், நீர்ப்

பொறி முதலியவற்றை அரசாங்கமே கொடுத்து உதவி யுள்ளது. இவ்வுதவிகளைக் கொண்டும், ஊர் மக்களின் சக்தியையும், ஊக்கத்தையும் கொண்டும் இவ்வியக்கம் நன்முக நடத்தப்பட்டு வருகிறது.

**கண்ணன் :** இவ்வேலைதள் ஒவ்வொன்றும் சரியாக நடக்கின்றனவா என்று மேற்பார்வை பார்ப்பவர் யார்?

**குமரன் :** அதற்கென்று அரசாங்கத்தார் 'மேற் பார்வையாளர்' ஒருவரை நியமித்துள்ளனர். வரவு செலவுகளைக் கவனிப்பதும், ஒழுங்காக வேலை நடக் கிறதா என்று பார்ப்பதும் அவர் வேலை.

**கண்ணன் :** குமரா! நீ சொல்லும் இம்முறை மிக மிக நல்ல முறையாகவும், நாட்டு மக்களுக்கு ஏற்ற முறையாகவும், விவசாயத்தை வளர்த்து உணவுப் பொருளை மிகுதியாக உற்பத்தி செய்யும் உயரிய முறை யாகவும் காணப்படுகிறது. இம்முறையை நம் நாட்டில் உள்ள கிராமங்கள் எல்லாவற்றிலும் பயன்படுத்திஞல் நம் நாடு உணவு பொருளுக்குப் பிறநாட்டார் உதவியை எதிர்பார்க்க வேண்டிய நிலை ஏற்படாது என்று நான் நினைக்கிறேன்.

**குமரன் :** ஆம். நீ நினைப்பது முற்றிலும் உண்மை தான். இம்முறையால் ஒவ்வொரு ஊரும் ஒற்றுமை கொண்டு வாழும் தன்மையைப் பெற்றுச் சிறப்புடன் விளங்கும். அன்றியும் ஒவ்வொரு கிராமத்தாரும் தங் கள் கிராமத்திற்கு வேண்டிய குடிதண்ணீர் வசதி, பாதைகள் அமைத்தல், நூல் நிலையம், வாஞெலி நிலையம்

முதலியன ஏற்படுத்தல், பள்ளிக்கூடம் வைத்தல், மருத்துவசாலை வைத்தல் முதலிய வசதிகள் அனைத்தையும் செய்து கொள்ளலாம். இம்முறையினைப் பின்பற்றுது கிராம முன்னேற்றம் என்பதைப்பற்றிப் எப்படிப்பட்டவர் எந்த மேடையில் சொற்பொழிவு ஆற்றினாலும் ஒரு பயனும் விளையாது என்பது என் கருத்து. நம் இந்தியாவில் ஏறக்குறைய ஏழுலட்சம் கிராமங்கள் இருக்கின்றன. கிராமங்களே இந்நாட்டின் உயிர்நாடிகளாக உள்ளன. ஆயினும் கிராமங்கள் கவனிப்பாரற்றுக் கீழான நிலைமைக்கு வந்துவிட்டன. நமது தேசப் பிதா **காந்தி அடிகள்** கிராம முன்னேற்றத்தைக் குறித்து மக்களுக்கு எடுத்துக்கூறி "இந்தியநாடு ஏற்றமுற வேண்டுமானால் கிராமங்களின் இழிநிலை நீங்கி உயர்வு பெறவேண்டும்" என்று தெளிவுபடுத்தினார். அதன் பிறகுதான் மக்கள் கிராமங்களின்மீது தங்கள் கருத்தைச் செலுத்தினர். இன்னும் சிலர் கிராம முன்னேற்றம் வேண்டும் என்று பேசுகின்றனரே ஒழிய, உடனடியாகச் செய்யவேண்டிய செயல்களை மறந்து விடுகின்றனர். இப்பொழுது நான் சொன்ன கூட்டுறவு பண்ணைமுறைகளைப் பல கிராமங்களில் மாதிரிப்பண்ணைகளாக நடத்திப் பார்க்கின்றனர். திறமையாகவும், ஒழுங்காகவும் நடத்தினால் இத்திட்டம் வெற்றிபெறும்.

**கண்ணன் :** ஆம். உண்மைதான். நம்மைப் போன்ற இளைஞர்கள் இத்தகைய திட்டங்களின் அவசியத்தை அறிந்து ஆவன செய்வதற்குத் திறமையுள்ளவர்களாக விளங்கவேண்டும். ஆங்காங்கு ஒரு சில சுயநலவாதிகள் இந்நல்ல திட்டத்திற்கும் தீங்கு செய்வர்.

மக்கள் முன் எச்சரிக்கையாக இருந்தால் விரைவில் கிராமங்கள் முன்னேறும்; மக்கள் முன்னேற்றம் அடைவர்.

**குமரன் :** நீ ஒரு முறை எங்கள் கிராமத்திற்கு வந்து கூட்டுறவுப்பண்ணை எப்படி நடைபெறுகிறது என்பதைப் பார். பார்த்து உங்கள் கிராமத்திலும் அம்முறையைக் கொண்டு வருமாறு முயற்சி செய்.

**கண்ணன் :** அடுத்த விடுமுறையின் போது உங்கள் கிராமத்திற்கு வருகின்றேன். நீ போகும்போது எனக்குத் தெரிவி.

**குமரன் :** சரி.

(இருவரும் போகின்றனர்)

## அருஞ்சொற் பொருள்

உள்ளம் கலந்து—மனம் ஒன்றுபட்டு, புலம்—நிலம், இழிநிலை—தாழ்வு.

## வினாக்கள்

1. கூட்டுறவுப் பண்ணை என்றால் என்ன?

2. நம் நாட்டு விவசாயம் முன்னேற்றமடையாமல் இருப்பதற்குரிய காரணங்களில் முக்கியமானது எது?

3. கூட்டுறவுப் பண்ணை முறையால் உண்டாகும் நன்மைகளை எழுது.

4. கூட்டுறவுப் பண்ணை முறை மிகவும் சிறந்தது என்று குமரன் கூறியதேன்?

5. காந்தி அடிகள் கிராமங்களைப் பற்றிக் கூறியதென்ன?

6. கூட்டுறவுப் பண்ணை ஏற்படுவதற்கு முன்னும் பின்னும் அவ்வூர் மக்கள் எவ்வாறு வாழ்ந்தனர், வாழ்கின்றனர் என்று குமரன் கூறினான்?

## கட்டுரைப் பயிற்சி

1. "கிராம முன்னேற்றமும் கூட்டுறவுப் பண்ணையும்" என்பது பற்றி ஒரு பக்கத்திற்கு மேற்படாமல் எழுது.

## மொழிப் பயிற்சி

1. பணம் உள்ளவர் வாங்குவர்; ஏழைக் குடியானவர்கள் வாங்கமுடியாது.—இதை வினவாக்கியமாக மாற்றி எழுது.

2. வாக்கியத்தில் அமைத்து எழுது:—

ஏற்றமுற, இழிநிலை, உடனடியாக.

3, கிணறு என்னும் சொல்லுடன் இரண்டு, மூன்று, ஆறும் வேற்றுமை உருபுகளைச் சேர்த்து எழுது.

---

# 15. உழவின் மேன்மை

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் :
வீணில் உண்டு களித்திடுவோரை நிந்தனை செய்வோம்"

என்றார் பாரதியார். உழவும், கைத்தொழிலும் எந்த நாட்டில் சிறப்புற வளர்க்கப்படுகின்றனவோ அந் நாடே சிறந்த நாடு என்று அறிஞர்களால் கருதப்படும். மக்கள் பசி நீங்க உண்டு, தேவையான பொருள்களைத் தாங்களே தயாரித்துக் கொள்ளும் நிலை ஒவ்வொரு நாட்டிற்கும் இன்றியமையாததாகும். அவ்வாறு பசி நீங்க, பஞ்சம் இல்லாத வாழ்வு வாழ உணவுப் பொருள் களை மிகுதியாகப் பயிரிடும் உழவுத் தொழிலின் மேன் மையையும், அதன் அவசியத்தையும் ஒவ்வொருவரும் அறிந்து கொள்வது நல்லதல்லவா ?

நமது தாய் நாடாகிய இந்திய நாடு உழவுத் தொழி லில் மேன்மையுற்ற நாடு. நாடு சிறக்க நல்ல உழவுத் தொழிலிலே சிறந்தது என்னும் உண்மையை உணர்ந்த நாடு. அதனால் இந்நாட்டில் விவசாயம் விரிவடைந்தது. நூற்றுக்கு எண்பது பேருக்குமேல் விவசாயிகளாக— உழவர்களாக விளங்குகின்றனர். அதற்கு வேண்டிய இயற்கை வசதிகள் அனைத்தும் நம் நாட்டில் அதிக மாகக் காணப்படுகின்றன. அவற்றை நல்ல முறையில் பயன்படுத்தி நாட்டைச் செழிப்புறச் செய்ய வேண் டியது நம் கடமையாகும்.

'உழுதுண்டு வாழ்வாரோ உயர்ந்தவர்' என்பது நமது நாட்டுப் பேரறிஞர்களின் கருத்தாகும். உழவுத் தொழிலை இந்நாட்டின் உயிர் நாடியாகக் கருதி ஆவன செய்து நல்வாழ்வு நடத்த வழி காணவேண்டும். இவ்வுண்மையை இந்தியராகப் பிறந்தவர் எவரும் மறத்தல் கூடாது. நீர் வளமும் நிலவளமும் நிறைந்து அவற்றைப் பயன்படுத்தும் மக்கள் தொகையும் மிக்குள்ள நம் நாட்டில், உணவுப் பஞ்சம் சிறிதும் ஏற்படாதபடி தடுத்து உழவுத் தொழிலை வளர்க்க உதவி புரியவேண்டுவது நம் கடமையாகும்.

உழவுத் தொழிலில் ஈடுபடுவோர் காலத்திற்கேற்ற புதுப் புது முறைகளைக் கையாளவேண்டும். பழங்கால முறைகளையே அனுசரிப்பதனால் நாம் அதிகமாக உணவுப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியாதவர்களாவோம். அதனால் விஞ்ஞான முறைப்படி இக்காலத்தில் பிறநாடுகளில் செய்யப்பட்டு வரும் நவீன முறைகளில் நம் நாட்டுக்கு ஏற்றவைகளைக் கைகொள்ள நாம் பின் வாங்குவது கூடாது. நிலத்தை உழுவதற்குப் பயன் படுத்தப்படும் 'டிராக்டர்' என்னும் உழுகருவியையும், கிணற்றிலிருந்து நீர் இறைக்கப் பயன்படும் நீர்ப்பொறிகளையும், மற்றும் உள்ள புதிய கருவிகளையும் நம்நாட்டு உழவுத் தொழிலாளர் பயன்படுத்தி உலவின் சிறப்பை உயர்த்த வேண்டும்.

இடைக்காலத்தில் வெளிநாடுகளிலிருந்து உணவுப் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டுக் குறைந்த விலையில் நம் நாட்டில் விற்கப்பெற்ற காரணத்தால் இங்கு உழவின் மேன்மை சிறிது குறைந்தது. மக்களும்

பயிர்த் தொழிலில் அதிக நாட்டம் செலுத்த மறந்தனர். பருவகால் மாறுபாடுகளும் சேர்ந்தன. அதனல் சில ஆண்டுகளாக உணவுப் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. இத் தகைய உணவுப் பஞ்சம் இனி இந்நாட்டில் ஏற்படாத வாறு கவனித்துக் கொள்ள வேண்டியது இந்தியராக பிறந்தவர் ஒவ்வொருவருடைய கடமையாகும். கடமை யுணர்ந்து - கடனுற்றும் பொறுப்பை உணர்ந்து - காலத்தை வீணுக்காது உழைத்தல் வேண்டும்.

உழவுத் தொழிலில் நம் முன்னோர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு அவர்கள் தங்கள் அனுபவ வாயிலாகக் கண்டு அறிவித்துள்ள பழ மொழிகளே நல்ல சான்ருகும். இன்னின்ன பயிரை இன்ன இன்ன காலத்தில் செய்தால் ஏற்றபலன் தரும் என்று அறிந்தனர். அதனல் '**பருவத்தே பயிர் செய்**' என்றும், '**ஆடிப் பட்டம் தேடி விதை**' என்றும் கூறினர். மேலும் '**காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்**' என்றும் இவைபோல் பிறவும் சொல்லி நமக்கு அறி வுறுத்தியுள்ளனர். இப் பழமொழிகளின் உண்மையை அறிந்து, நவீன முறைகளின் நன்மையை நாடி, நம் நாட்டு மக்கள் உழவுத் தொழிலில் ஊக்கம் காட்டுவார் களானல் நலம் பல விளையும் என்பது திண்ணம்.

உழவுத் தொழிலில் இளைஞர்களுக்குப் பற்று உண் டாகும் பொருட்டே சில பள்ளிகளில் தோட்டவேலை செய்தல், விவசாயக் கல்வி கற்றல் முதலிய பாட திட் டங்கள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பள்ளிக் கூடத்தில் தோட்டவேலை செய்வதனல் இளைஞர்கள்

எவ்வளவோ நன்மைகளைப் பெறுகின்றார்கள். இளமையிலேயே விவசாயக் கல்வி கற்பதினால் அவர்கள் உள்ளத்தில் விவசாயத்தில் ஈடுபாடு ஏற்பட்டுத் தங்கள் வாழ்நாளின் பிற்பகுதியில் பெரிய விவசாயிகளாக அவர்களால் விளங்க முடியும். ‘இளமையில் கல்வி சிலையில் எழுத்து’ என்பது முதுமொழி அல்லவா? ஆகவே இப்பொழுது இளைஞர்களாக இருப்பவர்கள் உழவுத் தொழிலில் எவ்வளவுக் கெவ்வளவு ஊக்கம் காட்டிப் பயிற்சி பெறுகின்றனரோ அவ்வளவும் இந்நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணமாகும் என்பதை எல்லோரும் நினைவில் இருத்திக் கொள்ளவேண்டும்.

வளங் குன்றிய வறண்ட நிலமெல்லாம் பிறநாடுகளில் வளமிகுந்த வயல்களாக மாற்றப்படுகின்றன. கறம்பு நிலம் என்று கடிந்து ஒதுக்கப்பட்ட நிலமெல்லாம் கரும்பும் வாழையும் பயிரிடப்படும் கழனிகளாகத் திருத்தப்படுகின்றன. ஒன்றுக்கும் உதவாத நிலம் என்று ஒதுக்கப்பட்ட இடமெல்லாம் பொன் விளையும் உயர்ந்த பூமிகளாக ஒழுங்கு படுத்தப்படுகின்றன. ஆனால் நம் நாட்டில்—பொன் விளையும் பூமி என்று போற்றப்படும் நம் நாட்டில்—நல்ல நிலமெல்லாம்கூட கவனிப்பாரற்றுக் கறம்பு நிலமாக ஆக்கப்படுகின்றன. இந்நிலை மாறவேண்டும். இளைஞர்கள் உள்ளத்தில் இந்நாடு பொன்னாடு என மீண்டும் போற்றப்பட வேண்டும் என்ற எண்ணம் தோன்றவேண்டும். எண்ணத்திற்கு ஏற்ற செயல்கள் செய்யும் மனவலிமை வேண்டும். மனவலிமைக் கேற்ற உடல் உரம் வேண்டும். இவற்றைப் பெற எல்லோர்க்கும் கல்வி வேண்டும். ஒரே

வேலையைக் கற்றவர் செய்வதற்கும் கல்லாதவர் செய்வதற்கும் மிகுந்த வேறுபாடு உண்டு. ஆதலின் கற்றவர்கள் உழவுத் தொழிலைத் தாழ்ந்ததென்று ஒதுக்காமல் அவர்களும் இத்தொழிலில் பங்கு கொண்டு உழைத்து இந்நாட்டைப் 'பாருக்குள்ளே நல்ல நாடு பாரதநாடு' என்று பலரும் புகழும்படியான உயர்நிலையை அடையும்படிச் செய்யவேண்டும்.

நெல், கேழ்வரகு, சோளம், கம்பு முதலான நவதானியங்களும், கரும்பு, வாழை முதலிய உயரிய பயிர் வகைகளும், பிற பொருள்களும், காய்கறி வகைகளும் செழிப்புடன் பயிராக்கப்பட்டு எல்லோரும் பசி நீங்கி வயிறார உண்டு வாழும் நாளே இந்நாட்டிற்கு நன்னாளாகும். எல்லோரும் இத்துறையில் இன்பமுடன் உழைத்தல் இன்றியமையாததாகும்.

## அருஞ்சொற் பொருள்

வந்தனை—வணக்கம், நிந்தனை—பரிகாசம், நாட்டம்—கவனம், பட்டம்—விதை, கறம்பு நிலம்—பயிரிடமுடியாத நிலம், உரம்—வலிமை, கடிந்து—வெறுத்து.

## வினாக்கள்

1. உழவின் சிறப்பைப் பாரதியார் எவ்வாறு கூறியுள்ளார்?
2. நம் நாடு விவசாய நாடு என்பது ஏன்?
3. இந்தியராகப் பிறந்தவர் எதை மறத்தல் கூடாது?
4. உழவுத் தொழிலில் செய்யவேண்டிய மாறுதல்கள் எவை?

5. உழவுத் தொழிலைப் பற்றிய பழமொழிகள் சிலவற்றை எழுது.

6. உழவுத் தொழிலில் பிறநாட்டார் முயற்சி என்ன பயனையளித்துள்ளது?

7. இந்நாட்டிற்கு நன்னாள் எது?

## பயிற்சிகள்

1. உழவுத் தொழிலில் ஈடுபடுவோர் புதுப்புது முறைகளைக் கையாளவேண்டும்—இவ்வாக்கியத்தில் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள்களை எழுது.

2. பின்வரும் வாக்கியத்திலுள்ள பிழைகளைத் திருத்தி எழுது:—

வலங்குன்றிய வரண்ட நிலமெல்லாம் பிற நாடுகளில் வலமிகுந்த வயல்களாக மாற்றப்படுகின்றன.

3. 'இளைஞர்கள்' என்ற சொல்லுடன் இரண்டு, மூன்று, நான்கு, ஆறும் வேற்றுமை யுருபுகளைச் சேர்த்து எழுது.

4. சேர்த்து எழுது:—பொன்+நாடு; உணவு+பஞ்சம்; உழவு+தொழில்; நூறு+கு.

———

# செய்யுள்

## பொதுப்பகுதி

## 1. வாழ்த்து

### தாயுமானவர் பாடல்

தந்தை தாயும் நீ; என்னுயிர்த் துணையும் நீ
சஞ்சலம் அது தீர்க்க
வந்த தேசிக வடிவம் நீ; உனையலால்
மற்றொரு துணைகாணேன்
அந்தமும் ஆதியும் அளப்பரும் சோதியே
ஆதியே! அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவரெனும்
சிரகிரிப் பெருமானே. 1

—தாயுமானவர்

### எல்லாம் இறைமயம்

அறக்கடல் நீயே அருட்கடல் நீயே
அருங்கரு ணாகரன் நீயே
திறக்கடல் நீயே திருக்கடல் நீயே
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே நிகர்கடந் துலகில்
நிலையுநீ உயிருநீ நிலைநான்
பெறக்கடல் நீயே தாயுநீ எனக்குப்
பிதாவும்நீ அனைத்தும்நீ யன்றோ? 2

—வீரமாமுனிவர்

## போற்றி

உலகெலாம் கடந்து நிற்கும்
　　உலப்பிலா அறிவே போற்றி
உலகெலாம் கலந்து வைகும்
　　ஒப்பிலா இறையே போற்றி
உலகெலாம் ஒழுங்கில் செல்ல
　　ஒளிபொழி பிழம்பே போற்றி
உலகெலாம் வணங்கி ஏத்தும்
　　ஒருவனே போற்றி போற்றி. 3

—திரு. வி. க.

## தமிழ் வாழ்த்து

இன்னிசை யணிந்த பொன்னிளஞ் செல்வி
　　இனிமையே தன்பெய ராளுள்
மன்னுல கெல்லாம் வணங்கிடத் தக்க
　　பொதுமறை யருளிய வாணி
பன்மொழிக் குயர்ந்த தொன்மொழி யரசி
　　பரமனின் வரம்பெற்ற புதல்வி
தன்னிக ரற்ற தமிழெனும் அமுதத்
　　தாய்மல ரடிபணிந் துய்வாம். 4

—சுவாமி சுத்தானந்த பாரதியார்

# 2. அறவுரை

## 1. அறநெறிச்சாரம்

தனக்குத் துணையாகித் தன்னை விளக்கி
இனத்துள் இறைமையுஞ் செய்து—மனக்கினிய
போகந் தருதலால் பொன்னே! அறத்துணையோ(டு)
ஏகமா நண்பொன்று மில். 1

ஒருநாளும் நீ தரியாய் உண்ணென்று சொல்லி
இருநாளைக் கிந்தாலும் ஏலாய்—திருவாளா !
உன்னோ டுறுதி பெரிதெனினும் இவ்வுடம்பே !
நின்னோடு வாழ்தல் அரிது. 2

காய்த லுவத்த லகற்றி ஒருபொருட்கண்
ஆய்த லறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்றகுணந் தோன்றாத தாமும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்றாக் கெடும். 3

அறிவுடைமை மீக்கூற்றம் ஆன குலனே
உறுவலி நற்றவ மோங்கிய செல்வமே
பொறிவனப்பின் எம்போல்வா ரில்லென்னும் எட்டும்
இறுதிக்கண் ஏமாப் பில. 4

மக்க ளுடம்பு பெறற்கரிது பெற்றபின்
மக்க ளறிவும் அறிவரிது—மக்கள்
அறிவ தறிந்தா ரறத்தின் வழுவார்
நெறிதலை நின்றொழுகு வார். 5

எப்பிறப் பாயினும் ஏமாப் பொருவற்கு
மக்கட் பிறப்பிற் பிறிதில்லை—அப்பிறப்பில்
கற்றலும் கற்றவை கேட்டலும் கேட்டதன்கண்
நிற்றலும் கூடப் பெறின். 6

—முனைப்பாடியார்

## 2. நான்மணிக் கடிகை

கந்தில் பிணிப்பர் களிற்றை ; கதம்தவிர
மந்திரத்தி னாற்பிணிப்பர் மாநாகம் ; கொந்தி
இரும்பில் பிணிப்பர் கயத்தை ; சான்றோரை
நயத்தில் பிணித்து விடல். 1

கன்றாமை வேண்டும் கடிய ; பிறர்செய்த
நன்றியை நன்றாகக் கொளல்வேண்டும் ; என்றும்
விடல்வேண்டும் தன்கண் வெகுளி ; அடல்வேண்டும்
ஆக்கஞ் சிதைக்கும் வினை. 2

மொய்சிதைக்கும் ஒற்றுமை இன்மை ; ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலும் மேனியை ; பெய்த
கலம்சிதைக்கும் பாலின் சுவையை ! குலஞ்சிதைக்கும்
கூடார்கண் கூடி விடின். 3

அஞ்சாமை அஞ்சுக ; ஒன்றின் தனக்குஒத்த
எஞ்சாமை எஞ்சும் அளவெல்லாம் ; நெஞ்சு அறியக்
கோடாமை கோடி பொருள்பெறினும் ; நாடாமை
நாடார்கண் விட்ட வினை. 4

திருவின் திறனுடையது இல்லை ஒருவற்கு ;
கற்றலின் வாய்த்த பிறஇல்லை ; எற்றுள்ளும்
இன்மையின் இன்னாதது இல்லை ; இலம்என்னும்
வன்மையின் வன்பாட்ட(து)இல். 5

இரும்பின் இரும்புஇடை போழ்ப ; பெருஞ்சிறப்பின்
நீர்உண்டார் நீரான்வாய், பூசிப ; தேரின்
அரிய அரியவற்றால் கொள்ப ; பெரிய
பெரியரான் எய்தப் படும். 6

போர்அறின் வாடும் பொருநர்சீர் ; கீழ்வீழ்ந்த
வேர் அறின் வாடும் மரமெல்லாம் ; நீர்பாய்
மடை அறின் நீள்நெய்தல் வாடும் ; படைஅறின்
மன்னர்சீர் வாடி விடும். 7

## 3. திருக்குறள்

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 1

செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 2

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 3

அன்பும் அறனும் உடைத்தாயின், இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 4

தந்தை மகற்காற்றும் உதவி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 5

அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 6

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 7

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 8

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. 9

நன்றேதரினும் நடுவு இகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 10

யாகாவா ராயினும் நாகாக்க ; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 11

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 12

பொறுத்தல் இறப்பினை என்றும், அதனை
மறத்தல் அதனினும் நன்று. 13

இலமென்று வெஃகுதல் செய்யார், புலம்வென்ற
புன்மையில் காட்சியவர். 14

கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல். 15

சொல்லுக சொல்லிற் பயனுடைய; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 16

தன்னைத்தான் காதலன் ஆயின், எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். 17

இடனில் பருவத்தும் ஒப்புர விற்(கு) ஒல்கார்
கடனறி காட்சி யவர். 18

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல், அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 19

புகழ்பட வாழாதார் தம்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன். 20

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். 21

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். 22

தன்நெஞ்சு அறியது பொய்யற்க: பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். 23

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற. 24

இன்னா செய்தாரை ஒறுத்தல், அவர்நாண
நன்னயஞ் செய்துவிடல். 25

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும். 26

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 27

விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ(டு) ஏனை யவர். 28

கற்றிலன் ஆயினும் கேட்க, அஃதொருவற்(கு)
ஒற்கத்தின் ஊற்றாம் துணை. 29

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 30

சென்ற இடத்தால் செலவிடாது தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு. 31

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 32

இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர். 33

மனநலம் நன்குஉடையர் ஆயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப்பு உடைத்து. 34

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு. 35

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முறிந்தார் பலர். 36

ஞாலங் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தால் செயின். 37

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா, எஞ்சாமை
எண்ணி இடத்தால் செயின். 38

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 39

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 40

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன், 41

அச்சம் உடையார்க்கு அரண் இல்லை ; ஆங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. 42

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 43

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 44

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். 45

சிதைவிடத்து ஒல்கார் உரவோர், புதையம்பின்
பட்டுப்பாடு ஊன்றுங் களிறு. 46

மடியிலா மன்னவன் எய்தும், அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு. 47

தெய்வத்தான் ஆகாது எனினும், முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 48

இடுக்கண் வருங்கால் நகுக, அதனை
அடுத்தூர்வது அஃது ஒப்பது இல். 49

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு. 50

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து. 51

சலத்தால் பொருள்செய்து ஏமார்த்தல் பசுமண்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று. 52

துன்பம் வரவரினுஞ் செய்க, துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 53

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். 54

அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக ; சொல்லின்
தொகையறிந்த தூய்மை அவர். 55

கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்றல் அதுவே படை. 56

முகநக நட்பது நட்பன்று ; நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு. 57

உள்ளற்க உள்ளம் சிறுகுவ, கொள்ளற்க
அல்லல்கண் ஆற்றறுப்பார் நட்பு. 58

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 59

ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 60

# 3. இயற்கைக் காட்சிகள்

## இமயமலைப் பெருமை

பொன்னின் கோட்டது புனிதவெண் கோட்டது புரை தீர்
மன்னும் மானச வாவியும் உடையது வரைப்பில்
துன்னும் ஆனினம் மானினம் முதலிய துலங்கப்
பன்னு சீரது பேரது பனிவரை இமயம். 1

—கா. நமச்சிவாய முதலியார்

## காலை வானம்

கோழிகூ விற்று வையம்
கொண்டதோர் இருளைத்தாங்க
மேழியில் உழுதான் அந்த
விரிகதிர்ச் செல்வன் பின்னர் :
ஆழிசூழ் உலகின் காட்சி
அரும்பிற்று ! முனைய விழ்ந்து
வாழிய வைய மென்று
மலர்ந்தது காலை வானம் ! 2

## ஞாயிறு

பொங்கியும் பொலிந்தும் நீண்ட
புதுப்பிடர் மயிர்சி லிர்க்கும்
சிங்கமே ! வான வீதி
திருதிரு எனஎ ரிக்கும்
மங்காத தணற்பி ழம்பே
மாணிக்கக் குன்றே தீர்ந்த !
தங்கத்தின் தட்டே ! வானத்
தகளியிற் பெருவி ளக்கே ! 3

—பாரதிதாசன்

## திங்கள் ஒளி

ஆற்று நீரெலாம் பாலென லாயதவ் வாற்றை
ஏற்ற வாரிதி நீரெலாம் படிகமொத் தியைந்த
ஊற்ற மிக்குயர் கிரியெலாம் வைரமே யொத்த
தோற்றி ருங்கலை நிரம்பிய மதிச்சுடர் தோய்ந்தே. 4

—எச். ஏ. கிருஷ்ணப் பிள்ளை

# 4. கதைப் பகுதி

## 1. ஆசிய ஜோதி

[கடுகு கிடைக்காமல் தாய் வருந்தி வந்து புத்தரிடம் கூறுதல்]

புவியெலாம் நிறைந்த புகழோய்! புலவர்
கவியெலாம் நிறைந்த கருணையங் கடலே!
ஊரெலாம் அலைந்தேன் ஒவ்வொரு மனையும்
ஏறி இரங்கினேன் என்குறை உரைத்தேன்
ஏழை ஒரு மகள்—ஏழை யலாதெவர்
ஏழைக் கிரங்குவர்?—என்கதை கேட்டு
மார்போ டணைத்த மதலையைக் கண்டு
மாறுக் கண்ணீர் வடிவதை நோக்கி
ஆறுத் துயரம் அடைந்தனள் இவளெனப்
பரிவு கொண்டெடன் பக்கம் நின்று
நாவிக் கொழித்த நாவுரிக் கடுகையும்
அளந்தென் மடியில் அளித்திட வந்தனள்
பிள்ளை யென்றிடில் பேயும் இரங்குமே!
பெண்டிர் இரங்குதல் பேசவும் வேண்டுமோ!
யானும், இட்ட கடுகை ஏற்பதன் முன்னம்
"தாயரே! நீவிர் தங்கும் மனையிது
சாவறி யாத தனிமனை தானோ?
தந்தை தாயர் தமக்கை தங்கை

மைந்தர் எவரும் மரித்தது முண்டோ ?
உரைத்திடும்" என்றேன்; உரைகேட் டவரும்
"வினவிய தென்ன ? விரிநீர் உலகில்
பிறந்தார், மூத்தார், பிணிநோய் உற்றார்
இறந்தார் என்கை இயல்பே அம்மா !
காலையில் உதித்த கடுங்கதிர்ச் செல்வன்
மாலையில் தளர்ந்து மறைவதும் இலையோ ?
இம்மா நிலத்தின் இயற்கையின் குறிப்பெலாம்
அம்மா நீயும் ஆய்ந்திலை போலும் !
இறந்தவர் எண்ணிலர் இருப்பவர் சிலரே ;
பிறந்தவர் இறப்பதும் இறந்தவர் பிறப்பதும்
உலகின் இயற்கை ; ஒழித்தலும் எளிதோ ?"
எனவாங்கு, தேறுதல் மொழிகள் தெரிந்தவை கூறிக்
கண்முன் சான்றுகள் காட்டி நின்றனர்.
யானும், உன், கட்டளை யுணர்ந்து கவலை கைம்மிக
மற்றொரு வீட்டின் வாயிலிற் சென்றேன்
அங்குளார், கடுகினை யளந்து கட்டிவைத்து
"அம்மா ! உழுதவர் இந்நாள் உலகில் இல்லை ;
விதைத்தவர் அன்றே விண்ணுல கெய்தினர் ;
காத்தவர் காலமும் கழிந்து விட்டது ;
அடிமையும் இறந்துநாள் ஐந்தா றுயது ;
காலனை எவரே கடக்க வல்லவர் ?"
என்று கூறினர் ; என்செய ஐயா ?

மங்கைமனத் தெளிவையெலாம் உரைத்த உண்மை
வார்த்தையினுல் அறிந்தவனை நோக்கி "அம்மா !
எங்குமிலாப் பொருள்தேடச் சென்று நீயும்
யான்நினைத்த பொருளதனைப் பெற்று வந்தாய்
தங்குமிந்த உலகியற்கை மாறு தம்மா
தனயனை நீ எண்ணிமனந் தளர வேண்டா
அங்கமெலாம் வாயாக அழுதிட்டாலும்
அவனெழுந்து நின்துயரம் அகற்ற லுண்டோ ?

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

## 2. நளவெண்பா

**(நளன் காட்டில் அரவம் கடித்தமையின் உருவம் மாறிய பிறகு இது ஏன்? என்று அரவத்தை வினவுதல்)**

ஆற்றல் அரவரசே ஆங்கென் உருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்(று)
என்கா ரணமென்றான் ஏற்றமரில் கூற்றழைக்கும்
மின்கால் அயின்முகவேல் வேந்து. 1

காயும் கடகளிற்றாய் கார்க்கோ டகன்என்பேர்
நீ இங்கு வந்த (து) யான் நினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந் (து) உறைதல் காரணமா
வேறாக்கிற்(று) என்றான் விரைந்து. 2

கூன்இருல் பாயக் குவலை தவளைவாய்த்
தேன்குரல் பாயுந் திருநாடா!—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினாய் இந்த
அணியாடை கொள்(க) என்றான் ஆங்கு. 3

சாதி மணித்துகில்நீ சாத்தினால் தன்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்கு நாநீட்டுந் துறைநாடார் கோவே!
ஒளிக்கும்நாள் நீங்கும் உரு. 4

வாகு குறைந்தமையால் வாகுகனென்(று) உன்நாமம்
ஆக அயோத்தி நகர் அடைந்து—மாகனகத்
தொழிற்கு மிக்கான் நீ ஆகென்றான் செம்மனத்தால்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து. 5

இணையாரும் இல்லான் இழைத்த உதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்—பணையாகத்
திண்நாகம் ஓர்எட்டும் தாங்குந் திசை அனைத்தும்
எண்ணாக வேந்தன் எழுந்து. 6

முன்னீர் மடவார் முறுவல் திரள்குவிப்ப
நன்னீர் அயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கும் நன்னாட்(டு) அரசு. 7

மான்தேர்த் தொழிற்கும் மடைத்தொழிற்கும் மிக்கோன்
[என்(று)
ஊன்தேய்க்கும் வேலான் உயர்நறவத்—தேன் தோய்க்கும்
தார்வேந்தற்(கு) என்வரவு தான்உரைமின் என்(று)
[உரைத்தான்
தேர்வேந்தன் வாகுகனாய்ச் சென்று. 8

அம்மொழியைத் தூதர் அரசற்கு அறிவிக்கச்
செம்மொழியாத் தேர்வேந்தைச் சிந்தித்தே—இம்மொழிக்
தக்கானை இங்கே தருமின் என உரைக்க [குத்
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. 9

பொய் அடையார் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகம்மலர்ந்து தேர்வேந்தன்—ஐயா நீ
எத்தொழிலின் மிக்காய் யாதுன் பெயரென்றான்
கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு. 10

அன்னம் மிதிப்ப அலர்வழியுந் தேறல்போய்ச்
செங்நெல் விளைக்குந் திருநாடர்—மன்ன! [றான்
மடைத்தொழிலும் தேர்த்தொழிலும் வல்லன்யான் என்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. 11

—புகழேந்திப் புலவர்

———

# 5. பல்சுவைப் பகுதி

## 1. தனிப் பாடல்கள்

### ஏர்ச் சிறப்பு

கார்நடக்கும் படிநடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனில்புகழ்சால் இயலிசைநா டகம்நடக்கும்
சீர்நடக்கும் திறம்நடக்கும் திருஅறத்தின் செயல்நடக்கும்
பார்நடக்கும் படைநடைக்கும் பசிநடக்க மாட்டாதே 1

—கம்பர்

### விருந்தினரை வரவேற்கும் முறைகள்

விருந்தின ருக வொருவன்வந் தெதிரின்
வியத்தல்நன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென வுரைத்தல்
எழுதல்முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற் றவன்றன் அருகுற விருத்தல்
போமெனிற் பின்செல்வ தாதல்
பரிந்துநன் முகமன் வழங்கலில் வொன்பான்
ஒழுக்கமும் வழிபடும் பண்பே. 2

ஆறுதலை சிவனுக் கைந்துமுக மைங்கரற்குக்
கூறுங்கை யைந்து குரவனுக்கு—வீறுதோள்
எட்டாஞ்சே டற்கிரட்டி யாயிரநா விந்திரற்குக்
கட்டா யிரங்கண் குகற்கு. 3

—சுந்தர கவிராயர்

## புலவனை இகழ்ந்த புல்லறிவாளன்

வாருநீர் யாரென்ன வித்துவா னென்னவும்
மதிமோசம் வந்த தென்றே
வாய்குளறி மெய்யெலா மிககடுக் குற்றுநீர்
வந்தகா ரியமே தெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
சிந்தா மணிக்கு நிகரே
செப்புவச னத்தரிச் சந்திரனே யென்னலும்
சினந்திரு கணுஞ்சி வந்தே
யாரைநீ மாடுகல் மரமென்று சொன்னதும்
அலாலரிச் சந்திர னென்றே
அடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினேன்
யார்கையிற் பெண்டு விற்றேன்
தீருமோ இந்தவசை யென்றுரை செய் வெகுகொடிய
தீயரைப் பாடி நொந்தேன்
திருமன்றுள் நடுநின்று நடமொன்று புரிகின்ற
தென்தில்லை நடராசனே. 4

—சரவணப் பெருமாள் கவிராயர்

## 2. பெண்ணின் வீரம்

கன்னின்றான் எந்தை ; கணவன் களப்பட்டான் ;
முன்னின்று மொய்யவிந்தார் என்ஐயர்—பின்னின்று
கைபோய்க் கணைஉதைப்பக் காவலன் மேலோடி
எய்போற் கிடந்தான்என் ஏறு. 5

—புறப்பொருள் வெண்பாமாலை

## 3. வேந்தன் கடமை

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்

அதனால், யானுயி ரென்ப தறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே. 6

—மோசி கீரனார்

## 4. குற்றாலக் குறவஞ்சி

### குற்றால மலைச் சிறப்பு

வானரங்கள் கனிகொடுத்து மந்தியோடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பார்
ககனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலுந் தேர்க்காலும் வழுக்கும்
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே. 7

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண்
[டோடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவி லீசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே. 8

—திரிகூடராசப்பக் கவிராயர்

## 5. வெற்றி எது ?

வெட்டி வெட்டிக் கொல்லுவார்
வீரம் என்று சொல்லுவார்
சுட்டுச் சுட்டுத் தள்ளுவார்
சூரம் என்று துள்ளுவார் 1

திட்டித் திட்டி ஏசுவார்
தீரம் என்று பேசுவார்
கட்டு வார்த்தை தீரும்ஓர்
காலம் வந்து சேருமோ ! 2

வீரம் மூட்டி விட்டவர்
வீட்டில் நின்று விட்டவர்
தீரம் சொல்லித் தந்தவர்
தெருவில் பேச வந்தவர் 3

சூரம் கூறிச் சென்றவர்
சொன்ன தோடு நின்றவர்
நேரிற் போரில் சிக்கினோர்
நிரப ராதி மக்களே 4

யுத்தம் என்ற மோகமும்
உலகை விட்டுப் போகுமோ ?
பித்தன் என்று நம்மையே
பேசு வார்கள் பேசின் என் ! 5

புத்தர் வந்து போனதும்
புனிதன் காந்தி வந்ததும்
பொய்த்துப் போக ஒண்ணுமோ ?
புவனி ஓங்கி வாழுமே ! 6

—நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை

## 6. விண்ணப்பம்

காலையிலே எழுந்துலவிக் கடன்கள் ஆற்றிக்
கதை பேசித் தொழில்புரிந்து காசுதேடி
மாலையிலே களித்துறங்கல் வாழ்க்கை யாமோ
மக்கள்நிலை அவ்வளவில் மாய்ந்தே போகும்
மேலையுமே தொடர்ந்துசெலும் மேன்மைத் தன்றே
விரியுலகில் விளம்பரமே விரும்பா தென்றும்
காலடியில் தலைசாய்த்துக் கருத்த மைத்துக்
கடன்கள்செய அருள்புரிவாய் கருணைத் தேவே.

திரு. வி. க.

# அரும் பதவுரை

## 1. வாழ்த்து

**1. தாயுமானவர் :** திருமறைக் காட்டில் பிறந்தவர். இவருடைய பாடல்கள் பக்திச் சுவையை வளர்ப்பவை.

சஞ்சலம் - துன்பம். தேசிகர் - குரு. அந்தம் - முடிவு. ஆதி-முதல். சிந்தை-மனம். சிரகிரி-திருச்சிராப்பள்ளி மலை.

**2. வீரமாமுனிவர் :** இத்தாலி நாட்டில் பிறந்து இந்தியாவுக்கு வந்து கிறிஸ்துவ மதப் பாதிரியாக இருந்தவர். தேம்பாவணி என்னும் சிறந்த நூலை இயற்றியுள்ளார்.

கருணாகரன்-கருணைக்கு இருப்பிடமானவன். நிகர்கடந்து-ஒப்பு இன்றி.

**3. போற்றி;** இப்பாடல் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களால் இயற்றப்பட்டது.

உலப்பிலா - அழிவில்லாத. வைகும் - தங்கியுள்ள. ஒழுங்கில் - நன்னெறியில். இறை - ஆண்டவன்.

**4. தமிழ் வாழ்த்து :** சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் பாடியது. அவர் பாண்டிச்சேரியிலிருந்து தமிழ்த் தொண்டாற்றி வரும் பெரியார் ஆவர்.

தமிழ் என்றால் இனிமை என்பது பொருள். அதனால் 'இனிமையே தன் பெயரானாள்' என்று குறித்துள்ளார்.

பொதுமறை - திருக்குறள். தென்மொழி - பழம் சிறப்பு வாய்ந்த தமிழ் மொழி. தன்நிகர் - தனக்கு ஒப்பு. அற்ற - இல்லாத.

## 2. அறவுரை

### 1. அறநெறிச்சாரம்

தரும வழிகளின் சாரமான கருத்துக்களை விளக்கிக் கூறும் நூல் என்பது இதன் பொருள். இந்நூலை இயற்றியவர் முனைப் பாடியார் என்பவர்.

1. தன்னை விளக்கி-தன்னைப் பலரும் அறியுமாறு செய்து. இறைமை - தலைமை. போகம் - இன்ப வாழ்வு. ஏகமா - ஒன்ருன.

2. தரியாய் - பொறுக்க மாட்டாய். ஏலாய் - ஏற்றுக் கொள்ளமாட்டாய்.

3. காய்தல் - வெறுத்தல். உவத்தல் - விரும்புதல். காய் வதன்கண் - வெறுக்கு மிடத்து.

4. மீக்கூற்றம் - மேலான வார்த்தை. வனப்பு – அழகு இறுதிக்கண் - முடிவில். ஏமாப்பு - பாதுகாப்பு.

5. வழுவார்-தவற மாட்டார். நெறிதலை-தரும வழியில்.

6. மனிதப் பிறவி எப்பொழுது மாண்புற்றதாகும் என் பதை இப்பாடலில் விளக்கியுள்ளார்.

### 2. நான்மணிக் கடிகை

**ஆசிரியர் :** விளிம்பி நாகனர். ஒவ்வொரு பாடலிலும் பவளமணிபோன்ற கருத்துக்கள் நந்நான்கு சொல்லப்பட்டு உள்ள காரணத்தால் நான்மணிக் கடிகை என்று பெயர் பெற்றது. கடிகை என்ருல் துண்டம் என்பது பொருள்.

1. கந்தில் - தறியில். களிறு - ஆண்யானை, கதம் - கோபம். பிணிப்பர் - கட்டுவர். கயத்தை - கீழோரை.

2. கன்றுமை-விரும்பாமை. வெகுளி-கோபம். ஆக்கம்-செல்வம். சிதைக்கும் - அழிக்கும். அடல் - விலக்குதல்.

3. மொய் - வலிமை. கலம் - பாத்திரம். தீயார் நட்பு தீமை விளைக்கும் என்பது கருத்து.

4. எஞ்சாமை - குறையாது செய்க. நட்டார் - நட்புச் செய்தவர்.

5. திரு - செல்வம். இன்மை - வறுமை. இன்னாதது - துன்பமானது. வன்பட்டது - வலிமை உடையது.

6. போழ்ப - பிளப்பர். வாய் பூசுப - வாய் கழுவுவர் தேரின் - ஆராய்ந்தால்.

7. பொருநர் - போர் வீரர். நீர்பாய் மடை - நீர் செல்லும் வாய்க்கால். படைஅறின் - சேனை இல்லாவிட்டால்.

## 3. திருக்குறள்

### திருக்குறள் திருவள்ளுவர் இயற்றியது

1. மாண் அடி – சிறந்த பாதங்களை, நிலம்மிசை - பூமியில். நீடு – சிறப்புடன் (நெடுநாளைக்கு.)

2. செய்கலாதார் - செய்யமாட்டார்.

3. மாசு - குற்றம். பிற ஆகுல நீர என்று மாற்றுக. ஆகுலம் - ஆரவாரம்.

5. அவையத்து - கற்றவர் கூடியுள்ள சபையில்.

6. சார்பு-பற்றுக்கோடு, ஆதாரம். மறம்-கொடுமை.

7. மோப்ப - முகந்துபார்க்க. குழையும் - வாடிவிடும். முகம் திரிந்து - முகம்மாறுபட்டு.

8. இன்னாத - தீமைபயக்கும் சொற்களை. காய்கவர்ந்தற்று - காயைத் தின்பதற்குச் சமமாகும்.

9. வையகம் - பூமி. ஆற்றல் - கைம்மாருக (பதிலுதவி யாகக்) கொடுத்தல்.

10. நடுவு இகந்து - நடுவுநிலைமைநீங்கி. ஆக்கம் - செல்வம்.

11. யா - காக்கவேண்டிய எல்லாவற்றையும். காவாக் கால் - காப்பாற்ருவிட்டால். சோகாப்பர் - துன்பம் அடைவர்.

12. உலகத்தோடு ஒட்ட - உலகப் பெருமக்களோடு பொருந்த.

13. இறப்பினை - அளவற்ற தீமைகளை. பொறுத்தல் - பொறுத்துக்கொள்க.

14. இலம் என்று - பொருள் இல்லாதவராய் உள்ளோம் என்று. வெஃகுதல் - பிறர் பொருளை விரும்புதல். புலம் வென்ற - ஐம்புலன்களையும் அடக்கிய. புன்மைஇல் - குற்றம் இல்லாத.

15. கண்நின்று - ஒருவர் முன்நின்று. கண் அற - தாட்சணியம் (கண்ணோட்டம்) இல்லாமல். முன்இன்று - ஒருவர் எதிரே இல்லாதபோது, பின்நோக்கா - பின்னல் நடக்கப் போவதை அறியாத.

16. பயனிலாத சொல் சொல்லக்கூடாது என்பது கருத்து.

17. காதலன் ஆயின் - விரும்புகின்றவன் ஆனல். தீவினைப் பால் - தீயசெயல். துன்னற்க - செய்யக்கூடாது.

18. காட்சி - அறிவு. இடன் இல் - தகுதியான இடம் இல்லாத. ஒப்புரவிற்கு - உபகாரம் செய்வதற்கு. ஒல்கார் - தளரமாட்டார்.

19. மாற்றுவார் - நீக்குகின்றவர்களுடைய.

20. தம்நோவார் - (தம்குறைகளுக்காக) தம்மை நொந்து கொள்ளாமல். நோவது எவன் - கோபிப்பது ஏன் ?

21. பழித்தது - இகழ்ந்துகூறும் கெட்ட செயல்களை. மழித்தலும் - மொட்டையடித்துக் கொள்ளுதலும். நீட்டலும் - தாடி, சடை முதலியவை வளர்த்தலும்.

22. ஆவதுபோல - வளர்வதுபோல.

23. பெய்யற்க - பொய்பேசாதே.

24. நகை - முகமலர்ச்சி. உவகை - மகிழ்ச்சி. கொல்லும் - அழிக்கின்ற.

25. ஒறுத்தல் - தண்டித்தல். நல் + நயம் = நன்னயம் - இனிய செயல்களை.

26. முறை - நீதி. இறை - தெய்வம்.

27. கேடுஇல் - அழிவு இல்லாத. விழுச்செல்வம் - மேலான செல்வம். மாடு அல்ல - செல்வமல்ல.

28. இலங்குநூல் - உயர்வுபெற்று விளங்கும்நூல்.

29. ஒற்கத்தின் - தளர்ச்சிவந்தபோது. ஊற்று ஆம் - ஊன்றுகோல்போல.

30. யார் யார் வாய்க் கேட்பினும் - யார் யார் சொல்லக் கேட்டாலும். மெய்ப்பொருள் - உண்மைப் பயனை.

31. தீது ஒரீஇ - தீய செயல்களை நீக்கி. நன்றின்பால் - நன்மைதரும் செயல்களில். உய்ப்பது - செலுத்துவது.

32. தினைத்துணை - சிறு அளவு. பழிநாணுவார் - பழிக்கு அஞ்சுபவர்.

33. இடிக்கும் - வற்புறுத்திக்கூறும். ஆள்வாரை - ஆதரவாகக் கொண்டுள்ள அரசர்களை.

34. ஏமாப்பு - பாதுகாப்பு.

35. எண்ணி - ஆராய்ந்து. எண்ணுவம் - ஆராய்ந்து கொள்வோம். இழுக்கு - குற்றம் ஆகும்.

36. தம் உடைவலி அறியார் என்று மாற்றுக. ஊக்கி - செய்யத் தொடங்கி. இடைக்கண் — நடுவில். முறிந்தார் - தோல்வியுற்றவர்.

37. ஞாலம் - பூமி முழுவதும். இடமும் காலமும் எண்ணிச் செய்தல் வேண்டும்.

38. எஞ்சாமை - தவருமல்.

39. நாடி - ஆராய்ந்து. மிகைநாடி - மிகுதியாக இருப்பதை அறிந்து.

40. தோற்றம் - துணிதல். அவா இன்மை - ஆசையில்லாமை. உடையான்கட்டே - உடையவனிடமே.

41. சுற்றப்பட - சூழ்ந்திருக்குமாறு. ஒழுகல் - நடத்தல் வேண்டும்.

42. அரண் - பாதுகாப்பான நிலைகள். பொச்சாப்பு - மறதி.

43. தழீஇ - அணைத்து. கோல் ஓச்சும் - செங்கோல் நடத்தும்.

44. அல்லல்பட்டு - மனம் வருந்தி. ஆற்ருது - பொறுக்க முடியாமல். தேய்க்கும் - அழிக்கும்.

45. கண் இலன் - கண்ணேட்டம் இல்லாதவன். நீடு இன்றி - நெடுநாட்களுக்கு நிலை நில்லாமல்.

46. சிதைவு இடத்து - அழியும் சமயத்தில். ஒல்கார் - மனம் தளரமாட்டார். பாடு ஊன்றும் - பெருமையை நிலை நாட்டும்.

47. மடி - சோம்பல். தா அயது - தாவிக்கடந்த உலகம்.

49. இடுக்கண் - துன்பம். நகுக - சிரிக்க. ஊர்வது - வெல்லக்கூடியது.

50. அமைச்சு - மந்திரி. தெரிதல் - ஆராய்ந்து அறிதல். ஒரு தலையா - உறுதியாக.

52. சவத்தால் - வஞ்சனையினுல். ஏமார்த்தல் - தன்னைப் பாதுகாத்துக்கொள்ளல். பசுமண் கலத்துள் - பச்சைக் களி மண் பாத்திரத்தில்.

54. எச்சம் - குறையை. தெறும் - கெடுக்கும்.

55. சொல்லின் தொகை - சொல்வகைகளை.

56. கூற்று - எமன். உடன்று - கோபித்து.

57. முகம்நக - முகம் மலரும்படி.

58. உள்ளம் - ஊக்கம். சிறுகுவ - குறையும்படியான செயல்களை. உள்ளற்க - நினைக்கக்கூடாது. அல்லல்கண் - துன்பக் காலத்தில். ஆற்று அறுப்பார் - இடையில் கைவிடுகின்றவர்.

59. ஒன்ஞர்கண் - பகைவரிடம்.

60. இழுக்கார் - தவறமாட்டார்.

## 3. இயற்கைக் காட்சிகள்

1. கோட்டது - உச்சியை உடையது. புரை - குற்றம். வரைப்பில் - அளவற்ற. துலங்க - விளங்க. வரை - மலை.

2. மேழி - கலப்பை.

3. மங்காத - குறையாத. தணற்பிழம்பு - நெருப்பு உருண்டை. தகளி - அகல்.

4. வாரிதி - கடல். படிகம் - பளிங்குக் கண்ணாடி. நிலாவின் ஒளியால் நதி பாலைப் போலவும், கடல் கண்ணாடி போலவும் மலை வைரம் போலவும் விளங்கின என்பது கருத்து.

## 4. கதைப் பகுதி

### 1. ஆசிய ஜோதி

திரு. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களால் பாடப்பட்டது. திருவாங்கூர் சமஸ்தானத்தில் உள்ள தேரூரில் பிறந்தவர். முத்தமிழாசிரியராக இருந்து அருந் தொண்டாற்றியவர். செந்தமிழ்க் கவிகள் பல பாடி இருக்கின்றனர்.

புவி - உலகம். கவி - பாடல். மதலை - குழந்தை. மாறு - நீங்காத. ஆறு - தாள முடியாத. பரிவு - அன்பு. மரித்ததும் - இறந்ததும். விரிநீர் - கடல். என்கை - என்று சொல்லுதல். ஆய்ந்திலை - ஆராய்ந்து பார்த்ததில்லை.

சான்றுகள் - ஆதாரங்கள். கைம்மிக - மிக அதிகமாக. காலன் - எமன்.

## 2. நளவெண்பா

நளனுடைய வரலாற்றைத் தெரிவிக்கும் நூல் என்பது பொருள். இதை யியற்றியவர் புகழேந்திப் புலவர் என்பவர்.

1. ஆற்றல் - வலிமையுடைய. அரவு - பாம்பு. சீற்றம் - கோபம். எயிறு - பல். அமர் - போர். அயில் - கூர்மை.

2. காயும் - கோபிக்கும். கடகளிறு - மதமுடைய யானை. காயத்தை - உடலை. மாருக்கி - மாற்றிக்கொண்டு.

3. கூன்இருல் - வளைவான இருல்மீன். தேன்இருல் - தேன் கூடு. தாங்கிஞய் - பொறுத்தாய்.

4. துகில் - ஆடை. தாது - தேன். ஒளிக்கும் நாள் - மாறிய உருவம் நீங்கிப் பழைய உருவம் பெறவேண்டிய நாள்.

5. செம்மனம் - நல்ல மனம். வாகு குறைந்தமையால் - தோள்கள் சுருங்கினமையால். கனகம் - பொன். நளனுக்கு வாகுகன் என்ற பெயர் ஏற்பட்டதற்குக் காரணம் கூறப்பட்டுள்ளது.

6. பனை - பருத்த. ஆகம் - உடல். நாகம் - யானை. புணையாக - துணையாக.

7. முந்நீர் - கடல். முறுவல்திரள் - இளநகை போன்ற முத்துக்குவியல். முருகு - அழகு. மொய்மலர் - இதழ்கள் நெருங்கிய மலர். தும்பி - வண்டு.

8. மடைத்தொழில் - சமையல் வேலை. ஊன் தேய்க்கும் - பகைவர் உடலை யழிக்கும். தார் - மாலை.

9. தருமின் - அழைத்து வருக. தேர்ந்து - தெளிந்து.

10. புரலவன் - அரசன். முகமலர்ந்து - முகமலர்ச்சியுடன்.

11. தேறல் - தேன். கொடைத் தொழிலின் மிக்கான் - நளன்.

# 5. பல்சுவைப் பகுதி

## 1. தனிப் பாடல்கள்

1. காராளர் - உழவர். புகழ்சால் - புகழ்பொருந்திய. உழவுத் தொழில் செய்வதற்கு இன்றியமையாத ஏரின் சிறப்பு இப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

2. வியத்தல் - மகிழ்தல். செப்பல் - சொல்லுதல். பரிந்து- அன்புகொண்டு. முகமன் - உபசாரம்.

3. சிவனுக்கு ஆறுதலை - சிவனுக்கு கங்கை தலையில் இருக்கிறது. ஐங்கரன் - விநாயகன். இப்பாடல் நயத்துடன் பாடப்பட்டுள்ளது.

4. புலவர் ஓர் அறிவில்லாதவனைக் காமதேனு போன்றவனே, சிந்தாமணி போன்றவனே, அரிச்சத்திரனைப் போன்றவனே என்று புகழ்ந்து சொல்ல அவன் தன் அறிவின்மையால் புலவரைப் பார்த்து நீர் யாரை மாடு, மரம், கல் என்று சொன்னீர்? அரிச்சந்திரன் என்றீரே நான் யாரிடம் அடிமையானேன்? மனைவியை விற்றேன்? என்று கோபமாகப் பேசி அனுப்பிவிட்டான். இப்படிப்பட்ட தீயோர்களைப் பாடி வருந்தினேன் என்று புலவர் இறைவனிடம் முறையிடுகின்றார்.

## 2. பெண்ணின் வீரம்

கல் + நின்றான் = கன்னின்றான். எந்தை - என் தந்தை. களப்பட்டான் - போர்க்களத்தில் மாண்டான். மொய் - வலிமை. அவிந்தார் - அழிந்தனர். என் ஐயர் - எனது அண்ணன். கணை - அம்பு. ஏறு - காளைபோன்ற வீரன்.

## 3. வேந்தன் கடமை

உயிர்த்து - உயிராக உடையது. அறிக்கை - அறிந்துகொள்ளல். தானை - படை (சேனை)

## 4. குற்றாலக் குறவஞ்சி

1. மந்தி - பெண்குரங்கு. கவி - குரங்குக்குட்டி, வான தேவர். ககனம் - ஆகாயம். திரை - அலை. பரிக்கால் - குதிரையின் கால்கள். தேர்க்கால் - தேரின் சக்கரம். வேணி - சடை.

2. கழங்கு - ஆடுங்கருவி. கிம்புரி - யானை. கொம்பு - தந்தம்.

## 5. வெற்றி எது ?

ஏசுவார் - இகழ்வார். நிரபராதி - குற்றம் அற்றவர். புவனி - உலகம். ஒன்னுமோ ?—முடியுமோ ?

## 6. விண்ணப்பம்

மேலையும் - மறுபிறப்பிலும். விரியுலகு - பரந்த உலகம். மேன்மைத்து - சிறப்பினையுடையது.



Approved by the Text Book Committee for class use vide Fort St. George Gazette Part II dated 19—5—'54 page 80

# AMUDA VACHAKAM

( BOOK III FOR FORM III GENERAL COURSE )

BY

VIDWAN N. SHUNMUGAM



[ Price Re. 1

*Published by*

SOUTH INDIA PUBLISHING HOUSE

KODAMBAKKAM

MADRAS-24